# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

"சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 42 திருவள்ளுவர் ஆண்டு 2054 நவம்பர் – 2023

உள்ளே...





# தடய அறிவியல் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Amorce | – பொட்டு வெடி |
| Associative evidence | – கூட்டுத் தடயம் |
| Colonic neuoplasm | – பெருங்குடல் கடைப்பகுதி |
| Charred document | – கருகிய ஆவணம் |
| Chromatography | – நிற ஆய்வியல் |
| Chromatoram | – நிற ஆய்வுப் படம் |
| Deep impression | – ஆழ் பதிவு |
| Developing process | – உருத் துலக்கும் முறை |
| Dust impression | – தூசியில் படிந்த பதிவு |
| Evidentary traces | – துல்லியத் தடயங்கள் |
| Finger print | – விரல் பதிவு |
| Float test | – மிதவை ஆய்வு |
| Friction ridges | – உராய்வுக் கோடுகள் (ரேகைகள்) |

| | |
|---|---|
| Guide line | – வழி காட்டும் வரி |
| Heel print | – குதிகால் தடம் |
| Inactivation | – செயலறச் செய்தல் |
| Inactiveness | - செயலற்ற தன்மை |
| Magnification | – உருப் பெருக்கம் |
| Magnifier | – உருப் பெருக்கி |
| Micro–camera | – நுண் படக்கருவி |
| Physical evidence | – தடயப் பொருள் |
| Pictorial record | – படப் பதிவுரு |
| Post mortem | – பிணக் கூராய்வு |
| Pour test | – ஊற்றிப் பார்க்கும் ஆய்வு |
| Therapeutic test | – நோய் தீர்வியல் ஆய்வு |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2054 துலை (ஐப்பசி)

நவம்பர் – 2023



ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# வீரமாமுனிவரைப் போற்றுவோம்!




உலகில் எத்தனையோ மொழிகள் தோன்றின; வளர்ந்தன; மறைந்தன. அவற்றுள் நின்று நிலைபெற்ற செம்மாந்த மொழி நம் தாய்மொழியாம் தமிழ்மொழியாகும். "எளிதில் பேசவும், பாடல் இயற்றவும் இயற்கையாக அமைந்தது தென்தமிழ்மொழி ஒன்றே" என்று வள்ளலார் அருள்கிறார். "தமிழ்மொழி சித்திர வேலைப்பாடமைந்த வெள்ளித்தட்டு. அதில் வைக்கப்பட்டுள்ள தங்க அரத்திப்பழம் (ஆப்பிள்) திருக்குறள். தமிழ் என்னை ஈர்த்தது; குறளோ என்னை இழுத்தது" என்று தமிழ்மொழியையும் அதற்கு வளம் சேர்க்கும் இலக்கிய, இலக்கணங்களையும் விதந்தோதுகிறார் மேலைநாட்டு மொழி அறிஞர் கிரௌல் என்பவர். மேலை நாட்டிலிருந்து தம் சமயத்தைப் பரப்ப தமிழகம் வந்து தமிழ்மொழியால், அதன் இனிமையால் கட்டுண்டு, முயன்று இம்மொழியைக் கற்று இம்மொழிக்கு வளம் சேர்த்தவர்கள் எண்ணற்றோர். அவ்விதம் தம் முப்பதாவது அகவையில் தம் மதம் பரப்ப தமிழகம் வந்தவர் வீரமாமுனிவர். தமிழன்னை தம் மகவாக இவரைத் தத்துப் பெற்றாரோ என வியக்கும் பிணைப்பு இருவருக்குமானது.

மறை பரப்பு முயற்சிக்காக வந்த இவர் தமிழ்மொழியைக் கற்றுத் தேர்ந்து தமிழில் வியத்தகு புலமை பெற்று இலக்கணம், இலக்கியம், அகராதி படைத்து, தமிழுக்குச் செழுமையூட்டினார். தமது பெயரினைத் 'தைரியநாதசாமி' என முதலில் மாற்றிக்கொண்டார். பின் அப்பெயரிலும் வடமொழிக் கலப்பு இருப்பதை அறிந்ததாலும், தமிழைக் கற்றுத் தேர்ந்ததாலும் தம் பெயரைச் செந்தமிழில் 'வீரமாமுனிவர்' என மாற்றிக்கொண்டார்.

இவர் தமிழகம் வந்தபின் சுப்ரதீபக் கவிராயரிடம் இலக்கண, இலக்கியம் கற்றுப் பேருரைகள் நடத்துமளவுக்குப் புலமை பெற்றார். இலக்கியச் சுவடிகளைப் பல இடங்களுக்குச் சென்று தேடி எடுத்ததால் 'சுவடி தேடும் சாமியார்' எனப்பட்டார். தமிழ்மொழியின் சிறப்பைத் திருக்குறள், தேவாரம், திருப்புகழ், நன்னூல், ஆத்திசூடி போன்ற தமிழ்நூல்களைப் பிற ஐரோப்பிய மொழிகளில் வெளியிட்டார். மேலும் தமிழ் கற்க ஏதுவாகத் தமிழ் – இலத்தீன் அகராதியை உருவாக்கினார். நிகண்டுகளுக்கு மாற்றாக சதுரகராதியைக் கொண்டு வந்தார்.

அக்காலத்தில் சுவடிகளில் மெய்யெழுத்துகளுக்குப் புள்ளி வைக்காமல் எழுதும் வழக்கம் இருந்தது. புள்ளிக்கு ஈடாக நீண்ட கோடிருக்கும். ஆகாரத்தை எழுதும் பொழுது அகரத்தின் மேல் புள்ளியிட்டு எழுதியதை விடுத்து அகரத்திற்குச் சுழியிட்டு ஆகாரத்தை எழுதினார்.

அ⇨ஆ

மேலும், ஒகர வரிசை எழுத்துகளில் புள்ளிகளால் ஏற்படும் குழப்பங்களை வீரமாமுனிவர் போக்கினார். 'எ' என்னும்

எழுத்திற்குக் கீழ்க்கோடிட்டு 'ஏ' என்னும் எழுத்தை நெடிலாகவும், 'ஒ' என்னும் எழுத்திற்குச் சுழியிட்டு 'ஓ' என்றும் எழுதினார். வீரமாமுனிவர் காலத்திற்கு முன்பு வரை 'ரகர' உயிர்மெய்யெழுத்து 'ர' எனத் துணைக்காலெழுத்தின்கீழ் இழுத்து எழுதப்படவில்லை. எனவே 'பாவை' என்று எழுதினால் அது பரவையா, பாவையா என்ற ஐயப்பாட்டு நிலை இருந்தது. வீரமாமுனிவர் தான் ரகர உயிர்மெய் எழுத்தினை 'ர' எனப் பாதம் வைத்து எழுதும் முறையை அறிமுகப்படுத்தினார். தமிழ் இலக்கிய – இலக்கணங்கள் கவிதை வடிவில் இருந்தன. அவற்றை மக்கள் எளிதில் படித்தறிய முடியவில்லை என்பதை உணர்ந்து உரைநடையாக்கினார்.

எழுத்துச் சீர்திருத்தம் செய்ததோடு மட்டுமின்றிப் பல நூல்களை எழுதியுள்ளார். செந்தமிழ் இலக்கணம் போல் கொடுந்தமிழ் இலக்கணம் கண்ட இவர் அந்நூலில் பேச்சுத்தமிழை விவரிக்கிறார். வழக்கும் செய்யுளும் ஒரு மொழியின் இலக்கணம் என்று கூறுகின்றார். உலகப் பொதுமறையாம் திருக்குறளை இலத்தீன் மொழியில் (அறம், பொருள்) மொழிபெயர்த்துள்ளார்.

இத்தாலியில் பிறந்து தம் முப்பதாம் அகவையில் தமிழகம் வந்து தமிழில் சிற்றிலக்கியம், இலக்கணம், உரைநடை, அகராதி எனப் பல படைத்தவர். அதோடு மட்டுமல்லாமல் தேம்பாவணி எனும் காப்பியத்தையும் படைத்துள்ளார். திருக்காவலூர்க் கலம்பகம், அடைக்கலமாலை, அன்னை அழுங்கல் அந்தாதி, கித்தேரியம்மாள் அம்மானை முதலிய சிற்றிலக்கியங்களையும், சதுரகராதி என்ற அகராதியையும், தொன்னூல் விளக்கம் என்ற இலக்கண நூலையும் எழுதியுள்ளார். தமிழின் முதல் ஏளன இலக்கியமான 'பரமார்த்த குரு கதை'யைப் படைத்தவர்.

"தேம்பாவணி தமிழ் அன்னையின் கழுத்தில் வாடாத மாலையாகத் திகழ்கிறது. காவலூர்க் கலம்பகம் கதம்ப மாலை. தொன்னூல் விளக்கம் பொன்னூலாக இலங்குகிறது. சதுரகராதி முத்தாரமாக மிளிர்கிறது. வீரமாமுனிவர் தமிழ் முனிவர்களுள் ஒருவர் ஆவார்."

– ரா.பி.சேதுபிள்ளை

"தொல்காப்பியர் காலத்திலிருந்து தமிழ் எழுத்துகளை எவராலும் மாற்ற முடியவில்லை. வெளிநாட்டில் பிறந்து ஏலாக்குறிச்சி என்ற சிற்றூரில் பாமர மக்களிடையே பணிபுரிந்த வீரமாமுனிவர் இத்தகைய சீர்திருத்தத்தைச் செய்து நடைமுறைக்குக் கொண்டுவந்தார். இது செயற்கரிய செயலாகும்."

– இராசமாணிக்கம்

"வீரமாமுனிவர் தமிழ்மொழியின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் சிறப்பான பணிகளைச் செய்துள்ளார். தமிழகத்தில் வாழ்ந்த புலவர்களுள் பல்துறை வித்தகராகத் திகழ்ந்தவர் வீரமாமுனிவரே. பல பெயர்களைக் கண்டு பொருள்களின் பெயர்ச் சொற்களைத் தொகுத்துப் பெயரகராதி எனவும், பொருள்களைத் தொகுத்துப் பொருளகராதி எனவும், எதுகை மற்றும் ஓசை ஒன்றாக வரும் சொற்களை வரிசைப்படுத்தித் தொடையகராதி எனவும் அமைத்துத் தமிழுக்குச் செழுமை சேர்த்து சதுரகராதி கண்ட பெருமை வீரமாமுனிவரையே சாரும் .

"தமிழ் அகராதியியலின் தந்தை" எனப் போற்றப்படும் வீரமாமுனிவர் திருக்காவலூரில் ஒரு கல்லூரியை ஆரம்பித்து அதில் தாமே தமிழாசிரியராக இருந்து இலக்கணம் கற்பித்தார். தமிழில் அமைந்த காப்பியங்களிலேயே தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத வெளிநாட்டவர் ஒருவரால் இயற்றப்பட்டது எனும் பெருமை தேம்பாவணிக்கே உண்டு. இக்காப்பியத்துக்காகச் 'செந்தமிழ்த் தேசிகர்' என்னும் பட்டம் இவருக்கு

வழங்கப்பட்டது. தமிழுக்காகவே வாழ்ந்து தொண்டு செய்து புகழ் எய்திய வீரமாமுனிவர் 1747இல் அம்பலக்காட்டுக் குருமடத்தில் இயற்கை எய்தினார். வீரமாமுனிவர் நாவன்மையும், பாவியற்றும் பாவன்மையும் படைத்தவர். சொல்லழகும், பொருளழகும் நிரம்பப் பெற்ற கவிகளை இயற்றிய வீரமாமுனிவர் என்னும் தமிழ் முனிவரின் புகழை என்னென்றும் போற்றுவோம். நிற்க.,

அகரமுதலி இயக்ககம் சார்பாக 08.11.2023ஆம் நாள் நடைபெற்றற 2023ஆம் ஆண்டுக்கான "தமிழ் அகராதியியல் நாள் விழாவிற்கு" வருகைதந்து 2022 ஆம் ஆண்டுக்கான தூயதமிழ் ஊடக விருது, நற்றமிழ்ப் பாவலர் விருது, தூயதமிழ்ப் பற்றாளர் விருது ஆகிய விருதுகளை வழங்கி, அகரமுதலி இயக்ககப் படைப்புகளை வெளியிட்டுச் சிறப்பித்த மாண்புமிகு தமிழ்வளர்ச்சி (ம) செய்தித்துறை அமைச்சர் திரு. மு.பெ. சாமிநாதன் அவர்களுக்கும், தமிழ்வளர்ச்சி (ம) செய்தித்துறை அரசு செயலாளர் மரு. இரா. செல்வராஜ் இ.ஆ.ப., அவர்களுக்கும், தமிழ்வளர்ச்சி இயக்கக இயக்குநர் முனைவர் ந. அருள் அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சி கொள்கிறேன்.

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத்துணைநிற்கும்அகராதியியலாளர்கள்,சொல்லாக்கவல்லுநர்கள்,மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "ABCD தந்த ஃபோனிசீய எழுத்துகள்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், மலேசியத் தமிழ்நெறிக் கழகத்தின் தேசியத் தலைவர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின், "மொழித்தூய்மையைப் பேணி இனத்தைப் பாதுகாப்போம்" என்னும் கட்டுரையும், மேனாள் ஆங்கில விரிவுரையாளர் முனைவர் ஆ. அரிமாப் பாமகன் அவர்களின், " தாம் – தான்" எனும் கட்டுரையும், புதுச்சேரி அரசினர் ஆய்வு நிறுவனத்தைச் சேர்ந்த முனைவர் ப.கொழுந்தசாமி அவர்களின், "தொல்காப்பியத்திலும் வள்ளுவத்திலும் 'தொல்' சொற்பொருண்மை ஒப்பீடு" எனும் கட்டுரையும், மொறப்பாக்கம் அரசு மேல்நிலைப்பள்ளி முதுநிலைத் தமிழாசிரியர் முனைவர் வை. சிவநேசன் (ம) சென்னை, வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்கள் இணைந்து எழுதியுள்ள "நிகண்டு – தோற்றம்" எனும் கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

# தமிழ் அகராதியியல் நாள் விழா –2023

"தமிழ் அகராதியியலின் தந்தை" என்று போற்றப்படும் வீரமாமுனிவரின் தமிழ்த்தொண்டைப் போற்றும் வகையில், அவரது பிறந்தநாளான நவம்பர் 8ஆம் நாளைத் "தமிழ் அகராதியியல் நாள் விழா"வாகக் கொண்டாட தமிழ்நாடு அரசு பிறப்பித்துள்ள அரசாணையின்படி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால், "தமிழ் அகராதியியல் நாள் விழா" கொண்டாடப்பட்டுவருகிறது.

அந்தவகையில் 2023 ஆம் ஆண்டுக்கான "தமிழ் அகராதியியல் நாள் விழா" சென்னை, கலைவாணர் அரங்கத்தில் 08.11.2023 ஆம் நாள் சிறப்புற நடைபெற்றது. இவ்விழாவில், மாண்புமிகு மாண்புமிகு தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அமைச்சர் திரு. மு.பெ. சாமிநாதன் அவர்கள் பங்கேற்று, 2022 ஆம் ஆண்டுக்கான "தூயதமிழ்ப் பற்றாளர் விருது", "தூயதமிழ் ஊடக விருது", "நற்றமிழ்ப் பாவலர் விருது" ஆகிய விருதுகளை 38 தூயதமிழ்ப் பற்றாளர்களுக்கு வழங்கி வாழ்த்துத் தெரிவித்தார். மேலும், 2023 ஆம் ஆண்டுக்கான "அகராதி ஆய்வு மலர்" "வட்டார வழக்குச் சொற்பொருள் அகராதி" "மருத்துவக் கலைச்சொல் அகராதி" "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் திருந்திய பதிப்பு (7 தொகுதிகள்), பன்மொழி அகராதியுடன் கூடிய குறுஞ்செயலி ஆகியவற்றை வெளியிட்டுச் சிறப்பித்தார்.

இவ்விழாவில் தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறையின் அரசு செயலாளர் மரு. இரா. செல்வராஜ், இ.ஆ.ப., தமிழ்வளர்ச்சி இயக்கக இயக்குநர் முனைவர் ந. அருள் மற்றும் தமிழறிஞர்கள் பலர் பங்கேற்றனர்.



## விருதாளர்கள் விவரங்கள்

### அ) தூய தமிழ்ப் பற்றாளர் விருது –2022

| வ.எண் | பற்றாளர்பெயர் | மாவட்டம் |
|---|---|---|
| 1 | செல்வன் த. தினேசு | அரியலூர் |
| 2 | திரு. பரணிப்பாவலன். வா. | செங்கல்பட்டு |
| 3 | கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு | சென்னை |

| | | |
|---|---|---|
| 4 | திரு. ச. கருத்தாளன் (எ) காளிதாசன் | கடலூர் |
| 5 | புலவர் கோ. வெங்கடாசலம் (பாவலர்கோ. மலர்வண்ணன்) | தருமபுரி |
| 6 | செல்வன் மோ. நாகஅர்ச்சூன் | திண்டுக்கல் |
| 7 | செல்வி பெ. தனலட்சுமி | ஈரோடு |
| 8 | செல்வன் ச. வாசுதேவன் (நடுநாட்டுத்தமிழன்) | கள்ளக்குறிச்சி |
| 9 | செல்வி விண்மீன்(சி. ஏமலதா) | காஞ்சிபுரம் |
| 10 | திரு. அகநம்பி (தமிழ்நம்பி) தி. பாலசுப்பிரமணியன் | கன்னியாகுமரி |
| 11 | முனைவர் வே. குழந்தைசாமி | கோயம்புத்தூர் |
| 12 | செல்வன் மு. சந்தோசுகுமார் | கிருட்டினகிரி |
| 13 | திரு. சித்தார்த்பாண்டியன் (பெ. தங்கப்பாண்டி) | மதுரை |
| 14 | செல்வி இர. அகிலா | நாகப்பட்டினம் |
| 15 | முனைவர் அ. செந்தில்குமார் (எ) தமிழ்க்குமரன் | பெரம்பலூர் |
| 16 | செல்வி மெ. சிவநந்தினி | புதுக்கோட்டை |
| 17 | திரு. சு. சோலைராசா | இராமநாதபுரம் |
| 18 | முனைவர் அ. மீனா | இராணிப்பேட்டை |
| 19 | முனைவர் தமிழ்ப்பரிதிமாரி | சேலம் |
| 20 | திருமதி கோ. ஆனந்தா | சிவகங்கை |
| 21 | திரு. பா. கோவிந்தராசன் | தஞ்சாவூர் |
| 22 | திரு. மு. சுப்பிரமணி | தேனி |
| 23 | செல்வி இ. செல்வகவிதா | தென்காசி |

| | | |
|---|---|---|
| 24 | முனைவர் ச. சரவணன் | திருப்பத்தூர் |
| 25 | செல்வி பு. கீர்த்தனா | திருப்பூர் |
| 26 | முனைவர் சி. இராமச்சந்திரன் | திருவள்ளூர் |
| 27 | செல்வி ச. கீர்த்தனா | திருவண்ணாமலை |
| 28 | திரு. தி. தினேசுபாபு | திருவாரூர் |
| 29 | திரு. வ. செல்வமாரிமுத்து | திருநெல்வேலி |
| 30 | திரு. நாவை. சிவம் (து.வை. சிவராமலிங்கம்) | திருச்சிராப்பள்ளி |
| 31 | முனைவர் செ.அந்தோணிராகுல்கோல்டன் | தூத்துக்குடி |
| 32 | செல்வன் இர. கண்ணன் | நாமக்கல் |
| 33 | செல்வன் ம.ச. சந்தீப் | வேலூர் |
| 34 | திரு. பெ. கலியன் | விழுப்புரம் |
| 35 | திருமதி பி.நிலா | விருதுநகர் |

## ஆ) நற்றமிழ்ப் பாவலர் விருது –2022

| வ.எண் | பிரிவு | விருதாளர்கள் |
|---|---|---|
| 1. | மரபுக்கவிதை | திரு. ப. எழில்வாணன் |
| 2. | புதுக்கவிதை | திரு. ம. சுடர்த்தமிழ்ச்சோழன் |
| | | |

## இ) தூய தமிழ் ஊடக விருது – 2022

| வ.எண் | பிரிவு | விருதாளர்கள் |
|---|---|---|
| 1. | அச்சு ஊடகம் | தென்மொழி – திங்களிதழ்<br>முனைவர் மா. பூங்குன்றன் |
| | | |

## வட்டார வழக்குச் சொற்பொருள் அகராதி வெளியீடு




## மருத்துவக் கலைச்சொல் அகராதி வெளியீடு




## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் திருந்திய பதிப்பு (7 தொகுதிகள்) வெளியீடு





**தூயதமிழ் ஊடக விருது**
**(அச்சு ஊடகம்)**
**"தென்மொழி" – திங்களிதழ்**
**முனைவர் மா. பூங்குன்றன்**



**நற்றமிழ்ப் பாவலர் விருது**
**(மரபுக்கவிதை)**
**திரு. ப. எழில்வாணன்**



**நற்றமிழ்ப் பாவலர் விருது**
**(புதுக்கவிதை)**
**திரு. ம. சுடர்த்தமிழ்ச்சோழன்**

சென்னை
மதுரை
கோவை
திருச்சி
திருநெல்வேலி
வேலூர்
தருமபுரி
புது தில்லி
விழுப்புரம்
நாகப்பட்டினம்
http://www.dinamani.com

தினமணி

வியாழக்கிழமை
9 நவம்பர் 2023
சென்னை
16 பக்கங்கள் ரூ.9

# தமிழ்ப் பற்றாளர்கள் 38 பேருக்கு விருது

## அமைச்சர் மு.பெ.சாமிநாதன் வழங்கினார்



சென்னை கலைவாணர் அரங்கத்தில் நடைபெற்ற தமிழ் அகராதியியல் நாள் விழாவில் விருதுகளைப் பெற்ற 38 தமிழ்ப் பற்றாளர்களுடன் செய்தித் துறை அமைச்சர் மு.பெ.சாமிநாதன். உடன் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறைச் செயலர் இரா.செல்வராஜ், தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் ந.அருள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்குநர் கோ.விசயராகவன்.

**சென்னை, நவ. 8:** தமிழ்ப் பற்றாளர்கள் 38 பேருக்கு விருதுகளை தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அமைச்சர் மு.பெ.சாமிநாதன் வழங்கினார். இதற்கான நிகழ்ச்சி, சென்னை கலைவாணர் அரங்கத்தில் புதன்கிழமை நடைபெற்றது. இந்த நிகழ்வில், கடந்த ஆண்டுக்கான தூயதமிழ்ப் பற்றாளர் விருதுகள் வழங்கப்பட்டன.

இதுகுறித்து தமிழக அரசு வெளியிட்ட செய்திக் குறிப்பு:

த.தினேஷ் (அரியலூர்), வா.பரணிப்பாவலன் (செங்கல்பட்டு), மெய்ஞானி பிரபாகரபாபு (சென்னை), ச. கருத்தாளன் (எ) காளிதாசன் (கடலூர்), கோ. வெங்கடாசலம் (எ) பாவலர்கோ. மலர்வண்ணன் (தருமபுரி), மோ. நாகஅர்ஜூன் (திண்டுக்கல்),

பெ. தனலட்சுமி (ஈரோடு), ச.வாசுதேவன் (எ) நடுநாட்டுத் தமிழன் (கள்ளக்குறிச்சி), விண்மீன்(எ) சி. ஏமலதா (காஞ்சிபுரம்), அகநம்பி (தமிழ்நம்பி) தி. பாலசுப்பிரமணியன் (கன்னியாகுமரி), வே. குழந்தைசாமி (கோயம்புத்தூர்), மு. சந்தோசுகுமார் (கிருஷ்ணகிரி),

சித்தார்த்பாண்டியன் (எ) பெ. தங்கப்பாண்டி (மதுரை), இர.அகிலா (நாகப்பட்டினம்), அ.செந்தில்குமார் (எ) தமிழ்க்குமரன் (பெரம்பலூர்), மெ. சிவநந்தினி (புதுக்கோட்டை), சு. சோலைராசா (ராமநாதபுரம்), அ. மீனா (ராணிப்பேட்டை), தமிழ்ப்பரிதிமாரி (சேலம்), கோ. ஆனந்தா (சிவகங்கை), பா. கோவிந்தராசன் (தஞ்சாவூர்),

மு. சுப்பிரமணி (தேனி), இ. செல்வகவிதா (தென்காசி), ச.சரவணன் (திருப்பத்தூர்), பு. கீர்த்தனா (திருப்பூர்),

சி. இராமச்சந்திரன் (திருவள்ளூர்), கீர்த்தனா (திருவண்ணாமலை), தி. தினேஷ்பாபு (திருவாரூர்), வ. செல்வமாரிமுத்து (திருநெல்வேலி), நாவை. சிவம் (எ) து.வை. சிவராமலிங்கம் (திருச்சி), செ.அந்தோணிராகுல் கோல்டன் (தூத்துக்குடி), இர. கண்ணன் (நாமக்கல்), ம.ச. சந்திப் (வேலூர்), பெ.கலியன் (விழுப்புரம்), பி.நிலா (விருதுநகர்) ஆகியோருக்கு தூய தமிழ்ப் பற்றாளர் விருதை, அமைச்சர் மு.பெ. சாமிநாதன் வழங்கினார்.

தூயதமிழ் ஊடக விருது மா. பூங்குன்றனுக்கும், நற்றமிழ்ப் பாவலர் விருது ம.சுடர்த்தமிழ்ச் சோழனுக்கும் வழங்கப்பட்டது.

இந்நிகழ்வில், தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறைச் செயலர் இரா.செல்வராஜ், தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் ந.அருள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் கோ.விசயராகவன் உள்ளிட்டோர் பங்கேற்றனர்.



# ABCD தந்த அற்புத ஃபோனிசீய எழுத்துகள்



முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்
இயக்குநர் பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு

"Enfin l'alphabet fut i'origine de toutes les connaissances de l'homme, et de toutes

"ஆனா ஆவன்னா" தான் மனிதனின் அனைத்துவித அறிவுகளுக்கும், அவனுடைய எல்லா அறிவின்மைக்கும் மூலம்.




Histoire de l'alphabet. Pierre Abrioux.

Egyptien hieroglyphe – எகிப்திய புனித எழுத்துகள் Egyptien hiératique – எகிப்திய மதகுருமார் எழுத்துகள் – byblos –பிப்லோஸ். phénicien ஃபோனிசியென். grec occidental–மேற்கு கிரேக்கம். grec classique – உயர் கிரேக்கம் italic et etrusquen இத்தாலிய எத்றுய்ஸ்க்.

**மாட்டுத்தலையும் A உம்..**

படங்கள் வழியாகப் பொருட்களின் வடிவங்கள் மனதில் விழுகின்றன. மொழிகளின் வரிவடிவமான படங்களே எழுத்துகள். உலகில் உள்ள மொழிகள் அவற்றின் எழுத்துகள் மூலமே அ றி ய ப் ப டு கி ன் ற ன . அடையாளப்படுத்தப்படுகின்றன. காலத்தையும் நாட்டையும் கடந்து நிற்பது எழுத்து. மொழிக்குரியவர்களின் நாகரிகத்தையும் வரலாற்றையும் ஆயிரம் ஆண்டுக்கணக்காகக் காவும் சிறிய வடிவங்களாக அமைந்தவையே இந்த அற்புத வடிவங்கள். A உம் இரு கொம்புகள் கொண்ட மாட்டுத்தலையும், B உம் ஈரறைகள் உள்ள வீடும் நெருங்கிய ஒப்புமை உடையன. இவ்வாறே தண்ணீருக்கும் M க்கும், பாம்புக்கும் S க்கும் தொடர்புகள் இருக்கின்றன. ஆங்கிலம், பிரெஞ்சு, இஸ்பானியம், துருக்கியம், வியட்நாமியம், ஸ்வகிலி மற்றும் எஸ்பெறென்ரோ முதலான மொழிகளின் ஆனா ஆவன்னாக்கள் – நெடுங்கணக்கு எழுத்துகள் ஒரேமாதிரியான தோற்றம் கொண்டவை. இம்மொழிகள் மட்டுமல்லாது, கிரேக்கம், அரபு முதலான உலகமொழிகள் பலவற்றிற்கும் Alphabets – ஆனா ஆவன்னாக்கள் – ஃபோனிசிய மொழியிலிருந்தே தத்தெடுக்கப்பட்டன! ஃபோனிசிய மொழியில் மாட்டுத்தலையை உருவகப்படுத்திய K.. மேற்கூறிய மொழிகளின் முதலெழுத்தான A எழுத்தைக் கொடுத்தது!

ஆனாஆவன்னா – நெடுங்கணக்கு – alphabet இல்லாமல் இலக்கணம் இல்லை. பேச்சு இல்லை. இலக்கியம் இல்லை. கவிதை இல்லை. வரலாறு இல்லை. கல்வி இல்லை. இவற்றை எல்லாம் இந்த எழுத்துகள் மூலம்தான் விளங்க வைக்கமுடியும். கற்க முடியும். விளங்கிக்கொள்ள முடியும். எழுத்து மொழியின் அடையாளம். ஒரு மொழியின் ஒலி வடிவங்களைக் குறிக்கப் பயன்படும் வரிவடிவங்களின் தொகுப்பு நெடுங்கணக்கு – ஆனா ஆவன்னா – alphabet எனப்படுகிறது. தமிழ் நெடுங்கணக்கின் முதலிரண்டு எழுத்துகளான அ –வும், ஆ–வும் பெயர்களாக ஆனா ஆவன்னா எனச் சொல்லப்படுகின்றன. நெடுங்கணக்கு என்பதை விட ஆனாஆவன்னா என்பது எளிதில் மனதில் பதியக்கூடியது. இலகுவாக விளங்கத்தக்கது. அதேபோல் alphabet என்பதை விட abc என்பது நடைமுறையில் உடனடியாகப் புரிந்துக்கொள்ளத்தக்கது.

### ஆனா ஆவன்னா alphabet

alphabet – எனும் சொல் alpha, beta என்ற இரண்டு சொற்களால் ஆனது. இவ்விரண்டு சொற்களும் கிரேக்க மொழி நெடுங்கணக்கின் முறையே முதல் இரண்டு எழுத்துகள் ஆகும். கிரேக்க எழுத்துகள் போனிசிய மொழி எழுத்துகளிலிருந்து மாற்றுவடிவம் எடுக்கப்பட்டவை. போனிசியர்களே மனித குலத்தின் மொழி எழுத்துகளை முதலில் கண்டுபிடித்தவர்கள். கிரேக்க alpha என்பது போனிசிய alef என்பதிலிருந்தும் beta என்பது போனிசிய beth என்பதிலிருந்தும் வந்தவை. Alef என்றால் மாடு என்றும் beth என்றால் வீடு என்றும் பொருள். உற்றுநோக்கிப் பார்த்தால்.... மாட்டுக்கொம்புகளைத் தலைகீழாக வைத்தது போல் A உம், பக்கப்பாட்டில் இரு அறைகள் கொண்ட வீட்டைப் போல் B உம் தோன்றும். alphabet என்றால் "மாடு –வீடு" எனப்பொருள் கொள்ளமுடியுமா? முதல் இரண்டு எழுத்துகளின் பெயராலேயே மொழிகளின் எழுத்துத் தொகுப்புப் பெயரிடப்படுகிறது. தமிழில், அரிவரி, அரிச்சுவடி, அட்சரம், நெடுங்கணக்கு, ஆதிச்சுவடி என்றும், பேச்சு வழக்கில் ஆனாஆவன்னா என்றெல்லாம் பெயர் கொள்ளப்படுகிறது. ஐரோப்பிய மொழிகளில் alphabet என்றே அழைக்கப்படுகிறது.

காட்டில் வாழ்ந்த மனிதர்கள் விலங்குகளின் உருவங்களைக் குகைச் சுவர்களில், குகைக் கூரைகளில் கிறுக்கிக்கிறுக்கி வரைந்தார்கள். 35000ஆண்டுகளுக்கு முன்னர் அவ்வாறாக வரையப்பட்ட குகை ஓவியங்கள் பிற்காலத்தில் எழுத்துகள் தோன்றுவதற்கு வித்திட்டன. மரப்பட்டைகளிலும் விலங்குத்தோல்களிலும் கீறினார்கள். வாழும் முறைகளில் வேறுமாற்றங்கள் ஏற்பட காண்பவற்றை, உணர்ந்தவற்றை வெளிப்படுத்த வேண்டும் எனும் இயல்பான உந்துதலால் கற்களில் பொறித்தார்கள்.

### அகர – உயிர்மெய் எழுத்துகள்

ஒலி எழுத்துகள் உயிர்மெய் எழுத்துகள் (syllabary letters) என்றும், அகரவகை எழுத்துகள் (alphabet letters) என்றும் பிரிக்கப்படும். சீனம், யப்பானியம், செவ்விந்திய மொழிகள்.... முதலானவை உயிர்மெய் எழுத்து வகைக்கும், ஃபோனிசியம், கிரேக்கம், இலத்தீன், அரேபியம் முதலான மொழி எழுத்துகள் அகர எழுத்து வகைக்கும் உரியன. தமிழ் எழுத்துகள் இந்த இருவகையையும் சேர்ந்தவையாகச் செயலாற்றுகின்றன. ஆதலினால் 216 எழுத்துகள் தேவைப்படுகின்றன. முதல் வகை எழுத்துகள் பயன்பாட்டில் அதிகமான எழுத்து உருவங்கள் தேவைப்படும். ஆனால் இரண்டாவது வகை எழுத்துகள் பயன்பாட்டில் ஓர் எழுத்து ஓர் ஒலியையே குறிக்கும். எழுத்துகளின் வளர்ச்சியில் முழுமையை, உன்னத நிலையை எட்டியவை அகர வகை எழுத்துகளே.

### எழுத்துமுறைக்கு வித்திட்ட சுமேரியம்..

ஒருகாலத்தில், மனிதர்கள் பொருட்களின் எண்ணிக்கையைக் கணக்கிடுவதற்கும், தன்னிடம் உள்ளவற்றைக் குறித்துக்கொள்வதற்கும், போவது வருவதைப் பதிவு செய்வதற்குமான அடிப்படையில் களிமண்ணில் படவெழுத்துகளாகக் (Pictogram) குத்திப் பதித்தார்கள். மாடு, ஆடு, தானியம், சூரியன், தலை, கால், பறவை, மீன், கடவுள், பெண்(குறி) போன்ற அடிப்படை உருவங்களைச் சுட்டுவதற்குப் படம் போல எழுத்துகளை வழக்கத்தில் கையாண்டார்கள். களிமண் தகடுகளில் குத்தாணியால் பதிக்கப்பட்ட இவ்வெழுத்துகள் ஆப்பெழுத்துகள் (Cuneiform) என அழைக்கப்படுகின்றன. குத்திஉண்டாக்கப்படும் வடிவம் மூலை அல்லது ஆப்பு (Cunei) போல் தோற்றும்.

இவ்வகையான முதல் எழுத்துமுறை மெசொப்பொத்தமியாவின் (Mesopotamia) தென்நிலமான சுமேரியாவில் (Sumer– இன்றைய ஈராக் ) கி.மு.3300 ஆம் ஆண்டளவில் நிலவியது. அரசியல், சமூக மற்றும் நாகரிக உயர்ச்சி நிமித்தம் புதிய நகரங்கள் கட்டியெழுப்பப்பட்டு, தூர தேச வணிகமுறை மேம்பட, சுமேரிய மொழியின் (Sumerien) பயன்பாட்டிலும் புதிய பரிமாணம் ஏற்பட எழுத்துகள் உருவாவதும் தேவையாக இருந்தது. புதிய எழுத்துமுறை முதல்முறையாக நகரத்தின் தொட்டிலான உருக் (Uruk ) எனும் செழிப்பான நகரத்தில் வளர்ச்சிபெற்றது.

மெசொப்பொத்தமியாவின் வடபகுதியான அக்காட்டில் (Akkad), அக்காடியெம் (Akkadien) மொழி பேசப்பட்டுவந்தது. இது செமிட்டிக்(Semitic) குடும்பமொழி. அக்காடியெத்திற்குத் தனியாகப் படவெழுத்துகள் இல்லாதிருந்ததனால், அயல்மொழியான சுமேரிய ஆப்பெழுத்து முறையையே இரவல் வாங்கி தனக்கான எழுத்து முறையை வேறுபட்ட ஒலிப்புடன் அமைத்துக் கொண்டது.

சுமேரிய எழுத்துகளுக்கு ஒலிப்பு முறை இல்லை. 2350 ஆம் ஆண்டளவில் உருக் மன்னனான Lugalzagesiக்கும் அக்காட் மன்னனான Sargonக்கும் போர் மூண்டதில், எழுத்து முறையை முதல் அமைத்துக்கொண்ட மன்னன் தோல்வி அடைந்தான். வலுத்தவனின் மொழி மெசொப்பொத்தமியா முழுவதையும் ஆக்கிரமித்து, நிருவாக மொழியாக கோலோச்சியது. கி.மு. பதினாறாம் நூற்றாண்டளவில் சுமேரியம் புனித மொழியாகி, அணைந்து போனது.

நாடு முழுமையும் பரவிய அக்காடியெம், கி.மு.இரண்டாயிரமாம் ஆண்டின் நடுப் பகுதியில், வடநாட்டில் பலெஓ – அசிரியெம் (Paleo – assyrien) எனவும், தென்னாட்டில் பலெபபிலோனியெம் (Paleo – babylonien) எனவும் இரு கிளைமொழிகள் ஆகியது. வடமொழி சாம்ராச்சிய மொழியாகவும், தென்மொழி இலக்கிய மொழியாகவும் நிலை கொண்டன. பபிலோனியம் அண்மை கிழக்கு நாடுகளுக்கான பொதுமொழியாகத் (Lingua franca) திகழ்ந்தது. பின்னர், கி.மு. ஆயிரமாம் ஆண்டின் தொடக்கப்பகுதியில், வட சிரியாவில் அராமெயெம் (Arameen ) எனும் சிறு மொழி அண்மை கிழக்கு நாடுகளில் பேசப்பட்டு வந்த மற்றைய மொழிகளை அடக்கி, பாரசீக சாம்ராச்சியம் முழுவதும் பொது மொழியாக (Lingua franca) ஆட்சி செய்தது.

ஏறத்தாழ 3000 வருடம் அளவில், மொகஞ்சதாரோ, கரப்பா 'எழுத்து வடிவங்கள் மெசொபொத்தமிய எழுத்து வடிவங்களுடன் ஒப்புமையுடையனவென James Février அறிஞர் Histoire de l'écriture நூலில் எழுதியுள்ளார். இவ்வெழுத்து வடிவங்கள் பானைகளிலும் வாளிகளிலும் பொறிக்கப்பட்டிருந்தன. மெசொபொத்தமிய(ஈராக்) தொடக்கம் Ismaliabad (ஈரான்), Tepe Yahya(ஆஃப்கானிஸ்தான்), Mehgrgarth (பாகிஸ்தான்) பின்னர் Penjab(இந்தியா) வரையும் புவியியல் தொடர்பு வழியாகக் கிட்டத்தட்ட ஒரே காலப்பகுதியில் நெருங்கிய ஒற்றுமையுடைய எழுத்து வடிவங்கள் பயன்பாட்டில் இருந்திருக்கின்றன. ஆனால் மொகஞ்சதாரோ, கரப்பா வடிவங்கள் விஞ்ஞானரீதியாக இன்னமும் சரியாக ஆராயப்படவில்லை.

## ஆப்பெழுத்து கூர்ப்பு




étoile – நட்சத்திரம், Terrain – நிலம். Homme – மனிதன். femme(pubis) – பெண் குறி. Montagnes – மலைகள். esclave. அடிமை. téte – தலை. bouche – வாய். Morceau de pain – ரொட்டி(பாண்)துண்டு. manger – சாப்பிடுதல். cours d'eau – நீரோட்டம். boire – குடித்தல். pied – கால். Oiseau – பறவை. poisson – மீன். boeuf – மாடு(தலை) épi – தானியம்.

| **Cuneiform** | **காஜம்** |
|---|---|
| Sumérien | –3300 |
| Akkadien | –2500 |
| Hitite | –1700 |

Ougaritique -1400
Urartiéen -800
Persepolis -600
Louis-Jean Calvet, Histoire de l'Ecriture

ஆப்பெழுத்துமுறை அண்மை கிழக்கு நாடுகளின் பிரதேச மொழிகளுக்கு எழுத்து முறையாக கி.மு. 3000 வருடத்திலிருந்து கி.மு.600 வருடம் வரை நீடித்திருந்தது. ஆப்பெழுத்துகளின் தொடக்கங்கள் முறையே சுமேரியம் - 3300, அக்காடியெம் - 2500, கித்திற் - 1700, ஊகாறிற்றிக் -1400, ஊறாற்றியெம் -800, பேர்ஸ்பொலிஸ் - 600 என Louis - Jean Calvet இன் Histoire de l'Ecriture எனும் நுலில் ஆராயப்பட்டிருக்கிறது. சுமேரியர்கள் பல தேசத்து மக்களுடன் நீண்ட காலம் தொடர்புகள் கொண்டிருந்ததினால் சுமேரியரின் எழுத்து முறை ஒரு பதினைந்து மொழிகளில் குறிப்பாக எலாமிற் (Elamite), நெசிற்(Nesite), பண்டைய பாரசீயம் ஆகியவற்றில் எழுத்து முறைகள் உருவாவதற்கும் வழி கோலியது.

எகிப்திய புனித எழுத்துகள் - Hiéroglyphique

மானிட மொழிகளின் வரலாற்றில் எகிப்து ஓர் முக்கிய இடம்பிடிக்கிறது. உலக மொழி களின் எழுத்துகளில் மிகவும் அழகானவை கியெரோகிளிஃப் வடிவங்களே. எகிப்தியர் களின் எழுத்துகள் கியெரோகிளிஃப் (Hieroglyphique) என அழைக்கப்படும். கிரேக்க மொழியில், புனிதசெதுக்கல்கள் எனப்பொருள்படும் இக்கூட்டுச்சொல் Hieros என்றால் புனிதமான, gluphein என்றால் செதுக்குதல் எனும் இருசொற்களால் ஆனது. எகிப்திய எழுத்துகள் கருத்துப்படவெழுத்துகள் (Idéogramme), அடையாளவெழுத்துகள் (Logogramme), எனும் வகையைச் சார்ந்தவை. கியெரோகிளிஃப் எழுத்துகள் கியெறாத்திக் (Hieratique), டெமோத்திக் (Démotique) என இருவகையாகப் பிரித்து வழங்கப்பட்டன. மதகுருமார்களுக்கு முதலாவது எழுத்து வகையும், பொதுமனிதர்களுக்கு இரண்டாவதும் உரியதாக அறிவுறுத்தப்பட்டது. தொடக்க காலத்தில், கியெரோகிளிஃப்கள் பெயர்கள், பட்டப் பதவிகள், அளவெண்ணிக்கை, பறவைகள், உடலுறுப்புகள் முதலானவற்றைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டன. எழுத்துகளின் பொருள்களுக்கேற்ப நீலம், சிவப்பு, மஞ்சள் வண்ணம் தீட்டப்படும். பழமை, அழகு, வண்ணம், மேன்மை ஆகிய சிறப்புகள் இருந்தும் இவை முழுமையான எழுத்துகளாக அமையவில்லை.

சுமேரியர் கண்டுபிடித்த ஆப்பெழுத்துகள் - படவெழுத்துகள் சுமேரியா, காலம், இடம், சூழலுக்கு ஏற்ப மாற்றுவடிவங்கள் அடைந்து, அக்காட், அசிரியா, பாபிலோனியா, பாரசீகம், எகிப்து, சினாய், பிரதேசமொழிகளுக்கு உரிய எழுத்து வடிவங்களாக பரிணாமம் பெற்றன. இந்த எழுத்து வடிவங்கள் தற்போது மறைந்து விட்டன. இம்மாதிரியான படவெழுத்துகள் நீண்டகாலங்களாக மாற்றி மாற்றி வடித்த உருவங்கள் பிற்காலத்தில் நிரந்தரமான எழுத்துக்களாக ஃபோனிசிய மொழியில் சங்கமமாகிவிட்டன. இம்மொழியின் ஆனா ஆவன்னா, கிரேக்கம், இலத்தீன், எனப் பலமொழிகளுக்கு ஆனாஆவன்னாக்களை அளித்துள்ளது. இவை பல மொழிகளின் அடையாளத் தொகுப்புகளாக நிலைத்து நிற்கின்றன. தழுவப்பட்ட எழுத்துகள் மொழிகளை அடையாளப்படுத்தும் வரிவடிவங்களாக விளங்குகின்றன.

## முன்னாள் மொழிகளும் மாறிய எழுத்துகளும்




protosinaique – தொல்சினாய். phenicien– போனிசியென்– corinthienகொறிந்தியென். arameen – அராமியென். grec – கிரேக்கம். sud – arabique – தென் அரபு. latin – இலத்தீன். nom – பெயர்.

### ∴போனிசியென் எழுத்துகள்



எழுத்துகள், மொழிக்கு முழுமைத் தன்மையை அளிப்பவை. புரட்சிகரமான அகரவகை எழுத்துகளைத் தோற்றுவித்து வரலாற்றில் அழியா இடம்பெற்றவர்கள், சிரியா, இஸ்ரேல், ஜோர்தான், லெபனான், சினாய் பிரதேசப்பகுதியில் அமைந்திருந்த ஃபோனிசியாவில் வாழ்ந்து வணிகத்தில் கொடிகட்டிப் பறந்த ஃபோனிசியர்களே! இவர்களின் நாடு நீளத்தில் சுமார் 300 கி.மீட்டரும், அகலத்தில் 16 – 20 கி.மீட்டரும் உடைய சிறிய நாடு. ஆயினும் சுற்றிவர அமைந்த பல நாடுகளுடன் பல விதமான வர்த்தகத் தொடர்புகளுடையவர்களாக இருப்பதில் இவர்கள் வெற்றி பெற்றிருந்தார்கள். சர்வதேசத் தொடர்புகளுக்காகத் தமது மொழியை விருத்திசெய்து பரப்ப முயன்றதன் விளைவாக எளிய எழுத்து முறைகளை உருவாக்கினார்கள். வணிகம் ஃபோனிசிய எழுத்துகள் பல நாடுகளுக்கு வணிகம் பரவ வழிசெய்தது. வணிக வலையம் மத்திய தரைக்கடல் தொடக்கம் கிட்டிய கிழக்கு நாடுகள் வரை விசாலித்து இருந்தது. அவசியம் கண்டுபிடிப்புக்கு மூலகாரணமாக இருந்தது.

ABCDEFUYGZHIKLMNOPQRS T – 22 மெய்யெழுத்துகள் (ஃபோனிசிய வரிசை)

ஃபோனிசியென் எழுத்து வடிவங்கள் சுமேரிய படவெழுத்துகளையும், எகிப்திய கியெரோகிளிஃப் எழுத்துகளையும் கலந்து தழுவியே அமைக்கப்பட்டவை. ஃபோனிசியர்கள் சுமார். கி.மு. 1000 ஆண்டு ஆண்டளவில் 22 மெய்யெழுத்துகள் மட்டும் கொண்ட ஆனாஆவன்னா–நெடுங்கணக்கை உருவாக்கிக் கொண்டனர். சொற்களுக்கு அடையாளங்களாக இடப்படும். அடையாள எழுத்துகளுக்கு ஒலிபெயர்ப்பு வடிவம் முதன் முதல் இருந்தது ஃபோனிசியென் முறையில்தான். வலது பக்கத்திலிருந்து இடது பக்கமாக எழுதும் முறை இவர்களின் முறை. இவர்கள் தம் இனத்தை கனான் (K'nanan) என்றே Phéniciens எனப் பெயர் அழைக்க, கிரேக்கர்கள் இவர்களுக்குப் ஃபொனிசியர் கொடுத்தனர். Phénicien எனும் சொல் சிவப்பு மக்கள் என்கிற பொருளுடைய Phoinikes என்ற பண்டைய கிரேக்கத்திலிருந்து வந்தது. இம்மொழி செமிட்டிக் குடும்பத்துக்கு உரியது. இம்மக்கள் பண்டைய யூத இனத்தைச் சேர்ந்தவர்கள்.

ABC க்களின் ரிஷி மூலம்

| | | | |
|---|---|---|---|
| 1. | alef | -A- | மாடு |
| 2. | bet | -B- | வீடு |
| 3. | gaml | - G - | ஒட்டகம் |
| 4. | delt | - D - | கதவு |
| 5. | hé | - E - | மணிச்சுட்டியல் |
| 6. | wau | -Y, V - | வளைந்த ஆணி |
| 7. | zai | -Z - | ஆயுதம் |
| 8. | hèt | -H- | சுற்றுச்சுவர் |
| 9. | tét | - e- | சக்கரம் |
| 10. | yod | - I - | நீண்ட கை |
| 11. | kaf | - K - | உள்ளங்கை |
| 12. | lamd | - L - | மாட்டுக்கம்பு |
| 13. | mém | -M - | தண்ணீர் |
| 14. | nun | -N- | மீன் |
| 15 | ain | -O- | கண் |
| 16. | pé | - P | வாய் |
| 17. | sadé | - S | பல் |
| 18. | qof | - Q | குரங்கு |
| 19. | res | - R | தலை |
| 20. | sin | - W | சூரியன், பற்கள் |
| 21. | tau | - T | அடையாளம் |

நெடுங்கணக்கு முதலெழுத்து A மாட்டுத் தலையைக் குறிப்பிடுகிறது. B வீட்டைக் குறிக்கிறது. D கதவைக் குறிக்கிறது. G ஒட்டகத்தைச் சுட்டுகிறது. H வேலியைக் குறிக்கிறது. I கையைப் பிரதிநிதித்துவம் செய்கிறது. K நீட்டிய உள்ளங்கையைக் காட்டுகிறது. L மாட்டுக்கம்பைக் குறிக்கிறது.
M தண்ணீரைக் காட்டுகிறது. N வளைந்த மீனைச் சுட்டுகிறது. O கண்ணைக் குறிக்கிறது. P திறந்தவாயைச் சுட்டுகிறது. Q குரங்கை நினைவூட்டுகிறது. R தலையைக் குறிக்கிறது. V, Y ஆணியைக் குறிக்கிறது. W பற்களைச் சுட்டுகிறது. Z ஆயுதத்தைக் குறிக்கிறது. E மணிச்சுட்டியலைச் சுட்டுகிறது.
C சக்கரத்தைக் குறிக்கிறது. S பல்லைக் குறிக்கிறது. T அடையாளத்தைச் சுட்டுகிறது.

ஃபோனிசியர்கள் தோற்றுவித்த அகர வகையை அடியாக வைத்துப் பல மொழியினர் தம் மொழிகளுக்கு எழுத்துகளை அமைத்துக்கொண்டனர். ஃபோனிசிய நெடுங்கணக்கின் 22 எழுத்துகளையும் கிரேக்கர்கள் தமது மொழிக்கு கி.மு. 800 ஆண்டளவில் எடுத்துக் கொண்டனர். அடுத்து, கி.மு. 700 ஆண்டுப் பகுதியில் இத்தாலிய எத்ருஸ்க்கர்கள் கிரேக்க எழுத்துகளைத் தழுவி தமது நெடுங்கணக்கை அமைத்துக்கொள்ள, தமது முறைக்கு இன்னோர் இத்தாலிய இனமான ரோமானியர்களும் தமது அட்சரங்களை இலத்தீனுக்கு நகல் செய்துகொண்டனர். ரோமானியர்கள் அயல் ஐரோப்பிய நாடுகளை வெற்றி கொள்ள, அந்நாட்டு மொழிகளுக்கும் ரோமானிய – இலத்தீனிய எழுத்துகள் (Alphabet latin) புகுத்தப்பட்டன. பின்னர் கி. பி. 500 ஆம் ஆண்டு போல், ரோமானிய சாம்ராச்சியம் உடைந்து போக, புதிதாக உருவாகிய, இத்தாலி, பிரான்ஸ், இஸ்பெய்ன், போர்த்துக்கல் போன்ற இளம் நாடுகளின் மொழிகளுக்கும் அரிச்சுவடிகளாக இலத்தீனிய எழுத்துகள் ஆகின.

ஃபோனிசிய 22 மெய்யெழுத்துகளையும் அப்படியே பிரதிபண்ணி கிரேக்க நெடுங்கணக்கை உருவாக்கி, a,e,O,i ஆகியவற்றை உயிரெழுத்துகளாகக் கிரேக்கர் மாற்றிக்கொண்டனர். பின்னர் upsilon ஒலிக்கு குறியீடாக u ஐ உண்டாக்கினர். தொடர்ந்து X எழுத்தைத் தோற்றுவித்தனர். எனவே கிரேக்க நெடுங்கணக்கு 24 எழுத்துகள் கொண்டதாக ஆனது.

ABCDEF GHIKLMNOPQRSTVXYZ – 23 எழுத்துகள் (இலத்தீன் வரிசை)

முதலில் இலத்தீனில் 21 எழுத்துகள், பின்னர் y, z ஆகியன சேர்த்துக்கொள்ளப் பட்டதினால் 23 ஆயின. மேலும் புதிதாக s,r புகுத்திக்கொள்ள 25 ஆகி இறுதியாக W நுழைக்கப்படவே பிரெஞ்சில் 26 எழுத்துகள் அமைந்தன. இவற்றை ஆங்கிலம் அப்படியே தனக்கும் உரிய நெடுங்கணக்காக்கி விட்டது.

| மொழி | நெடுங்கணக்கு (எழுத்துகள்) |
|---|---|
| ஃபோனிசியம் | 22 |
| கிரேக்கம் | 24 |
| இலத்தீன் (ரோமானியம்) | 23 |
| பிரெஞ்சு | 26 |
| இஸ்பானியம் | 28 |
| இத்தாலியம் | 21 |
| ஆங்கிலம் | 26 |

உலகமொழிகள் ஏழு வகையான எழுத்து வடிவங்களைக் கையாளுகின்றன. அவற்றில் இலத்தீன் நெடுங்கணக்கு எழுத்துகளே 100 முக்கிய மொழிகளுக்கு நெடுங்கணக்காக உள்ளன. அமெரிக்கா, ஐரோப்பா (மேற்கு, கிழக்கின் சில பகுதிகள்), ஆபிரிக்கா (மத்திய, தெற்கு), ஓசியானியா, தென்கிழக்காசியா (சில பகுதிகள்), துருக்கி என 120 நாடுகளின் மொழிகளுக்கு இலத்தீனிய நெடுங்கணக்கு முழுமையான பயன்பாட்டில் உள்ளது. அகிலத்தை ஆளும் ஆங்கிலத்தின் ஆதிச்சுவடியாக முதலில் றூய்னிக் எழுத்து (Alphabet runique) முறையே உலவியது. அவ்வாறே ஜெர்மனியத்தின் ஆனா ஆவன்னாவாக கோதிக் எழுத்து (Alphabet gothique) முறையே நிலவியது.

அந்த எழுத்து முறைகள் கைவிடப்பட்டு இலத்தீனிய அட்சரங்கள் நடைமுறையில் வந்தன. யுனெஸ்கோ சர்வதேச மொழிப்பாவனைக்கு உலகக் கழக ஒலி எழுத்து (International Phonetic Alphabet) முறைக்கு ரோமானிய எழுத்துகளையே அங்கீகரித்திருக்கிறது. உலகத்தின் எந்த மூலைக்குப் போனாலும் இந்த எழுத்துகளைக் காணலாம்.

வேறு நெடுங்கணக்கு வடிவங்களைப் பயன்படுத்திய நாடுகள் பிற்காலத்தில் அரசியல் மாற்றங்களின் காரணமாக அந்தந்த எழுத்து வடிவங்களைக் கைவிட்டு, இலத்தீன் எழுத்து வடிவங்களை எடுத்துக்கொண்டனர். உதாரணமாக, துருக்கி நாட்டில் 1920 இல், கமால் அறாருர்க்கின் ஆட்சியில் வழங்கி வந்த அராபிய எழுத்து முறை நிறுத்தப்பட்டு ரோமானிய முறை புகுத்தப்பட்டது. இதேபோல், 1990 இல், முன்னாள் சோவியத் நாடுகளான அஜெர் பெயெட்ஜன், துருக்மெனிஸ்தான், உஸ்பெகிஸ்தான் ஆகியன சிறிலிக் எழுத்து முறையை விட்டு ரோமானிய எழுத்துகளைக் கைக்கொண்டன. வியட்நாமில் பிரெஞ்சிய அரசினால் பாரம்பரிய வியட்நாமிய எழுத்து முறை நிறுத்தப்பட்டு ரோமானிய வடிவங்கள் திணிக்கப் பட்டன. மலாய் மொழி ரோமானிய எழுத்துருவங்களையும் பெருமளவில் உபயோகிக்கிறது.

### தமிழுக்கு எழுத்துகள் ஃபோனிசியன் தழுவலா......?

அசோகச் சக்கரவர்த்தியினால் வடஇந்தியாவில் கையாளப்பட்ட பிராமி எழுத்துகள், கால வளர்ச்சியில், தென்னிந்தியாவுக்குச் சமயச்சார்பில் வந்த சமணரால் திரிந்த வடிவுடையதாகி, பின்னர் வட்டெழுத்தாகத் தொடர்ந்து தமிழெழுத்தாக மாறியுள்ளன எனத் தமிழெழுத்தின் வரிவடிவம் எனும் தனது நூலில் தமிழ்ப்பேராசிரியர் சி. கோவிந்தராசனார் குறிப்பிட்டுள்ளார். பிராமி எழுத்து வடிவங்கள் சுமார் 200 எழுத்துகளை வழங்கியிருக்கின்றன என Albertine Gaur எனும் எழுத்தியல் வல்லுநர் A History of Writing எனும் நூலில் தெரிவித்துள்ளார். பிராமியானது வட எழுத்துகள், மத்திய ஆசிய எழுத்துகள், தென் எழுத்துகள், கிழக்கு எழுத்துகள் என நான்கு பெரும் எழுத்துப் பிரிவுகளைப் பிறப்பித்திருக்கிறது. இவற்றில் தென் எழுத்துகள் கிறித்துவ ஊழியின் தொடக்கத்தில் தமிழ், சமஸ்கிருதம் முதலான இந்திய மொழிகளுக்கு வரிவடிவம் ஆகின.






**ஆரம்ப எழுத்து வடிவங்கள்**

**தமிழ்ச்சுவடியியல் பயிற்சி கையேடு. சரசுவதி மகால் நூலகம். தஞ்சாவூர்**

### துணைநூல்கள் :


1.Une histoire de l'alphabet. David Sacks. Les Editions de l'homme. 2003.s

2. Histoire de l'écriture. Louis – Jean Calvet 1995, Plon

3. Histoire de l'alphabet. Pierre Abrioux, 1975

4. La naissance des Ecritures. L.Bonfante, J. Chadwick, B.F.Cook, W.V.Davies, J. F. Healy, J.T.Hooker, C.B.F. Walker. 1994. Seuil

5. Les Origines de l'œcriture. Les Cahiers de Science.2008

6. Aux sources de l'écriture. Le Courrier de l'UNESCO. 1995.

7. தமிழ்ச்சுவடியியல் பயிற்சி கையேடு. சரசுவதி மகால் நூலகம். தஞ்சாவூர். 2004

8.தமிழெழுத்தின் வரிவடிவம். சி. கோவிந்தராசனார். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை. 2004 Louis Jean Calvet. 1995. Plon Pierre Abrioux. 1975.




எழுத்துக்களின் குடும்ப மரம்

# தாம் – தான்!

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"எந்தன் உள்ளம் துள்ளி
விளையாடுவதும் ஏனோ?
கண்ணும் கண்ணும் ஒன்றாய்க் கூடி
பேசும் விந்தை தானோ!"
(கு. மா. பாலசுப்பிரமணியம்,
கணவனே கண்கண்ட தெய்வம்).

*******

தொல்காப்பியம், சொல்லதிகாரம், பெயரியல்:
"தாம் என் கிளவி பன்மைக்கு உரித்தே." (30).

"தான் என் கிளவி ஒருமைக்கு உரித்தே.(31).

விளக்கம்:
தாம் என்பது பன்மைக்கு உரியது (30).
எ. கா: தாம் வந்தார், தாம் வந்தன.

தான் என்பது ஒருமைக்கு உரியது (31).
எ. கா: தான் வந்தான், தான் வந்தாள், தான் வந்தது.

* தான், தாம் என்பன உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொது; ஒருமை பன்மையை மட்டுமே குறிக்கும் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.
ஆதலின்,
தான் – தன் ஒருமை;
தாம் – தம் பன்மை.

* என் + தன் = என்றன் ஒருமை. ✓
எந்தன் = எம் + தன் ×. இதில் எம் பன்மை, தன் ஒருமை. ஆகவே, இது ஒருமை பன்மை மயக்கம்!
'எந்தன் உள்ளம்' – மயக்கத்தில் வந்தது!

என்றன் ✓; எந்தம்✓

இப்பிழை திரைப்பாடல்களிலும் பலருடைய எழுத்துகளிலும் நாளேடுகளிலும் காணப்படும் பொதுவான பிழையாகிவிட்டது. ஆங்கிலத்தில் இவ்வகையான பிழை வரும்போது தவறு என்போர் தமிழில் நேரும்போது பிழையெனச் சொல்வதுண்டோ? (பிற்குறிப்பும் பார்க்கவும்).

"கன்னிக்காய் ஆசைக்காய்
காதல்கொண்ட பாவைக்காய்
அங்கே காய் அவரைக்காய்
மங்கை எந்தன் கோவைக்காய்"
(கண்ணதாசன், பலே பாண்டியா).

"நீ எந்தன் கோவில்
நான் அங்கு தீபம்
தெய்வத்தின் முன்னே
நீயும் நானும் வேறல்ல....."
(கண்ணதாசன், இதயக்கமலம்).

"என்ன பார்வை
உந்தன் பார்வை இடை
மெலிந்தாள் இந்தப் பாவை
மெல்ல மெல்ல பக்கம்
வந்து தொட்ட சுகம்
அம்மா ஆ ஆஆ"
(கண்ணதாசன், காதலிக்க நேரமில்லை).

"இதோ எந்தன் தெய்வம் முன்னாலே
நான் ஒரே ஒரு புன்னகையில் கண்டேனே
பாசமுள்ள பார்வையிலே
கடவுள் வாழ்கிறான் – அவன்
கருணையுள்ள நெஞ்சினிலே கோயில்
கொள்கிறான்"
(வாலி, பாபு).

"எந்தன் காதல் என்னவென்று சொல்லாமல்
ஏங்க ஏங்க அழுகை வந்தது...
எந்தன் சோகம் உன்னைத் தாக்கும்
என்றெண்ணும்போது வந்த அழுகை
நின்றது...
மனிதர் உணர்ந்து கொள்ள
இது மனித காதல் அல்ல;
அதையும் தாண்டி புனிதமானது"
(வாலி, குணா)

"தேவி எந்தன் பாடல் கண்டு
மார்பில் நின்று ஆடும்
நாதம் ஒன்று போதும்
எந்தன் ஆயுள் கோடி மாதம்"
(வைரமுத்து, காதல் ஓவியம்).

"எந்தன் வானின் காதல் நிலவே
இன்று தேய்வது எதனால் நிலவே
நீயும் வளர் பிறையாக நிலவே..."
(வைரமுத்து, காதல் வைரசு).

அவர் தன் கனவை நனவாக்கத் தான் வாழ்ந்த வீட்டை விற்று வெளிநாடு செல்ல முயன்றார். ×

அவர் தம் கனவை நனவாக்கத் தாம் வாழ்ந்த வீட்டை விற்று வெளிநாடு செல்ல முயன்றார். ✓

இவை தான் உயர்ந்தது எனத் தன் பாடல்களில் கூறியுள்ளார். ×

இவை தாம் உயர்ந்தவை எனத் தம் பாடல்களில் கூறியுள்ளார்.✓

"இந்த சந்திப்பின்போது அமைச்சர், தன் அருகில் சோபா இருந்தும் அடிகளாரின் முன் தரையில் அமர்ந்து இருப்பது போன்ற புகைப்படம் தான் சர்ச்சைக்கு காரணம்." ×
(செய்தி)

"இந்தச் சந்திப்பின்போது அமைச்சர், தம் அருகில் சோபா இருந்தும் அடிகளாரின் முன் தரையில் அமர்ந்து இருப்பது போன்ற புகைப்படம் தான் சர்ச்சைக்குக் காரணம்."✓

* சோபா – sofa – நுரைப்பூஞ்சேக்கை/ நுரைப்பூவிருக்கை.
சர்ச்சை – முரண்மை.

"நினைந்து, கைந்நெகிழ்ந்த அனைத்தற்குத் தான் தன்
பேர் அமர் மழைக் கண் ஈரிய கலுழ"
(நற்றிணை 29:8–9).
* தான் – தன் (ஒருமை).

"யாமெங் காமந் தாங்கவும் தாந்தம்
கெழுதகை மையி னழுதன தோழி
கன்றாற்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர்
மன்ற வேங்கை மலர்பத நோக்கி
ஏறா திட்ட ஏமப் பூசல்
விண்டோய் விடரகத் தியம்பும்
குன்ற நாடற் கண்டவெங் கண்ணே."
(குறுந்தொகை 241).
* தாம் – தம் (பன்மை).
எம் கண்ணே தாம் தம் கெழுதகைமையின் அழுதன.

"உன்றன் மணிச்சிறகும் சின்னக் கருவிழியும்
என்றன் விழிகட்கே எட்டா உயர்வானில்
பாடிக்கொண்டே யிருப்பாய்! பச்சைப் பசுந்தமிழர்
தேடிக்கொண் டேயிருப்பார் தென்பாங்கை உன்பால்!"
(பாவேந்தர், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் கவிதைகள் இரண்டாம் தொகுதி, 2.06. வானம்பாடி).
* உன்றன், என்றன் ✓

"பெய்யுமாமுகில் போல்வண்ணா ! உன்றன்
பேச்சும்செய்கையும், எங்களை
மையலேற்றி மயக்கவுன்முகம்
மாயமந்திரந் தான்கொலோ,
நொய்யர்பிள்ளைக ளென்பதற்குன்னை
நோவநாங்க ளுரைக்கிலோம்,
செய்யதாமரைக் கண்ணினாயெங்கள்
சிற்றில்வந்து சிதையேலே!"
(நாச்சியார் திருமொழி 14).
* உன்றன் = உன் + தன்.

"நீதியால் வாழ மாட்டேன்
நித்தலுந் தூயே னல்லேன்
ஓதியும் உணர மாட்டேன்
உன்னையுள் வைக்க மாட்டேன்
சோதியே சுடரே உன்றன்
தூமலர்ப் பாதங் காண்பான்
ஆதியே அலந்து போனேன்
அதிகைவீ ரட்ட னீரே."
(தேவாரம் 4, 26, 3).
* உன்றன்.

"வார மாகித் திருவ டிக்குப்
பணிசெய் தொண்டர் பெறுவ தென்னே
ஆரம் பாம்பு வாழ்வ தாரூர்
ஒற்றி யூரேல் உம்ம தன்று
தார மாகக் கங்கை யாளைச்
சடையில் வைத்த அடிகேள் உந்தம்
ஊரும் காடு உடையும் தோலே
ஓண காந்தன் தளியு ளீரே."
(தேவாரம் 7, 005, 9).
* உந்தம் = உம் + தம். (பன்மை, மதிப்புறு பன்மை).
** உமக்கு இல்லமாவது சுடுகாடு; உமது உடையாவது தோல்!

"எந்தம் பிறவியிற் கோபம் மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட"
(திருவாசகம், திருவண்டப்பகுதி: 73 – 75).

பொருள்: எங்கள் பிறவிகளாகிய தம்பலப் பூச்சிகள் செறிந்து தோன்ற, இறைவனின் இரக்கமானது இனிய முரசு அடித்தாற் போல முழக்கம் செய்ய, பூப்போன்றனவாயுள்ள அடியவர் கூப்பிய கைகள் காந்தள் மலர்போல விளங்க,
* எந்தம் பிறவி = எங்கள் பிறவி; கோபம் – இந்திரகோபம் = தம்பலப்பூச்சி.

என், என்னுடைய – என்றன் ✓ எந்தன் ×
உன், உன்னுடைய – உன்றன் ✓ உந்தன் ×
எங்கள், எங்களுடைய – எந்தம்✓
உங்கள், உங்களுடைய – உந்தம் ✓
நம், நம்முடைய – நந்தம்✓

நான் தான், நாம் தாம், நாங்கள் தாம்...✓
நீ தான், நீர் தாம், நீங்கள் தாம்..... ✓
அவன் தான், அவள் தான், அவர் தாம்,

அவர்கள் தாம்... ✓
அது தான், அவை தாம்✓
தான் – தானே; தாம் – தாமே!

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து."
(திருக்குறள் 398).
* ஒருவன் + கு = ஒருவற்கு, ஒருவன் – தான்;
ஒருமை – எண் இயைபு. ✓

"தாமின் புறுவது உலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்."
(திருக்குறள் 399).
* கற்று அறிந்தார் – அறிந்தார் – தாம்
(இன்புறுவது); பன்மை – எண் இயைபு. ✓

பிற்குறிப்பு:

he – himself, she – herself, they – themselves.
இது முறையான ஆங்கில இலக்கணம்.

14 ஆம் நூற்றாண்டுவரை themself
ஒருமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.
இப்போதும் ஆண், பெண் என
வேற்றுமையறியாத போது சிலரால்
ஒருமையில் they – themself
பயன்படுத்தப்பட்டாலும் இதை இலக்கணியர்
ஏற்றுக்கொள்வதில்லை.
கொச்சைவழக்கெனத் தள்ளிவிடுவர்.

திரு பா. மதிவாணன் அவர்கள் என
எழுதுவோம். ஒருவரே ஆயினும் அவர்கள்
எனப் பன்மைச்சொல்லைப் பயன்படுத்துவோம்.
இதை மதிப்புறு பன்மை (honorific plural) என்பர்.

[Both "themselves" and "themself" are acceptable as reflexive singular pronouns; however, "themselves" is currently the more common usage... nonstandard. : themselves –now used chiefly in place of "himself or herself" as a gender-neutral reflexive form of they when the reference is to a single person (as in "each person can decide for themself")...
But if you'd been typing in the late 1300s, themself would have been the default: it was the only version around until the mid-1400s. The earliest evidence of themselves referring to plural they or them is from 1466, and the earliest evidence of themselves referring to singular they or them is from 1529....
* Most of the Usage Panel rejects the use of they with singular antecedents as ungrammatical, even in informal speech....]

## மயங்கொலிச் சொற்கள்

**எரி**

1. தீ "கண்தரவந்த காம ஒள் எரி" (குறுந்.305:1)
2. சூரிய மண்டலம் " எரி சினம் தணிந்த இலையின் அம்சினை" (நற்.30:5-6)
3. வெம்மை "கதிர் தெற நீள் எரிபரந்த" (அகம்.51:1)
4. வால் வெள்ளி " மிக வானுள் எரிதோன்றினும்" (புறம்.395:4)
5. விளக்கு "மரூஉத் திரி கொளீஇய குரூஉத் தலைநிமிர் எரி" (நெடு.103)
6. ஒளி "எரிகொள் செஞ்ஞாயிறு இரண்டுடனே" (சட.வி. 82)
7. நிரயம் "நிரயம் துருக்கம் பாதாளம்...எரியும் என்று" (நிக.தி.5:13)

**எறி**

1. கவர் "பசுங்கழை மீன் எறி தூண்டிலின்" (குறுந்.54:3-4)
2. வீசு "எறிவளி கழும்" (குறுந்.199:4)
3. வெட்டு " கரும்பின் கால் எறி கடிகை" (குறுந்.318:1)
4. தாக்கு " எறிசுறா கலித்த" (குறுந். 318:1)
5. வெளிவிடு, சிந்து "வீங்கு இழை நெகிழவிம்மி ஈங்கே எறி" (குறுந். 358:1)

நன்றி : மயங்கொலிச் சொல்லகராதி

# மொழித்தூய்மையைப் பேணி இனத்தைப் பாதுகாப்போம்


**இரா. திருமாவளவன்**

தேசியத் தலைவர்,

மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா




"ஆதி சிவன் பெற்றுவிட்டான் என்னை
ஆரிய மைந்தன் அகத்திய னென் றோர்
வேதியன் கண்டு மகிழ்ந்தே – நிறை
மேவும் இலக்கணஞ் செய்து கொடுத்தான்"

என்றுமாப்பாவலர் பாரதியார் தமிழ்மொழியின் தோற்றத்தைப் பற்றி ஒரு தொன்மக் கதையின் அடிப்படையில் கூறியிருக்கின்றார். மொழிகள் மாந்தனால் மாந்தனுக்காகப் படிமுறை வளர்ச்சியின் அடிப்படையில் உருவானவையே அன்றி, திடீர் தோற்றமாக இருக்க முடியாது.மொழியைப் பற்றிய சரியான மொழியியல் மற்றும் வரலாற்று ஆய்வு குன்றிய காலக்கட்டத்தில் மேற்கண்ட பொருந்தாக் கருத்துகள் கூறப்பட்டன. இன்று அவை களைந்தெறியப்பட்டுள்ளன. ஆனால் தமிழ்மொழியின் தோற்றம் அவ்வாறானதன்று. திடீர் தோற்றமாக, பொருள்களைக் கண்டுபிடிப்பது போல் ஒரு மக்கள் கூட்டம் பேசுவற்காக மொழியைச் செயற்கையாக உருவாக்க முடியாது. அவ்வாறு உருவாக்கப்பட்ட முயற்சிகள் அனைத்தும் தோல்வியில் தான் முடிந்தன. எசுப்பிராண்டோ, இண்டர்லிங்குவா, வொலாப்புக், நோவியல் முதலான மொழிகள் செயற்கையாகத் தோற்றுவிக்கப்பெற்று தோல்வியில் முடிந்தன.

1887 ஆம் ஆண்டு எசுப்பிராண்டோ எனும் மொழி எல். சாமென்கோப் என்பவரால் உருவாக்கப்பெற்றது. இண்டர்லிங்குவா யீ. பியானோ என்பவரால் 1908 ஆம் ஆண்டு உருவாக்கப் பெற்று அனைத்துலக செயற்கை மொழி அமைப்பினரால் செப்பம் செய்யப்பட்டது. 1879 ஆம் ஆண்டு வொலாப்புக் எனும் மொழி யே. எம். சுக்லேர் என்பவரால் உருவாக்கப்பெற்றது. நோவியல் எனும் மொழி ஓட்டோ யேப்பர்சன் என்பவரால் 1928 ஆம் ஆண்டு 1959 ஆம் ஆண்டு வார்சாவிலும் 1978 ஆம் ஆண்டு பல்கேரியா, வார்னாவிலும் உலகளாவிய எசுப்பிராண்டோ மாநாடு கூட்டப் பெற்றது குறிப்பிடத்தக்கது. இத்தகு செயற்கை மொழிகள் ஒட்டுமொத்தமான மக்கள் மனமாக அமையவில்லை. தமிழ்மொழியின் தோற்றம் இயற்கையானது. இயல்பானது. பல்லாயிரம் ஆண்டுகளாக ஒரு மாந்தக் குடி பேசி, பண்பட்ட ஓர் உயர்தனிச் செம்மொழியே தமிழ்.

"Tamil" is the most highly cultivated language and possesses the richest stores of indigenous litera–ture" என்கிறார் மாக்சு முல்லர். No language combines greater force with equal brevity than Tamil and it may be asserted that no human speech is more close and philosophic in this expression as an exponent of the mind than the same என்பது பெர்சிவலின் கருத்து. இத்தகு உயர்தனிச் செம்மொழியில் பிறமொழிச் சொற்கள் கலக்கின்ற பொழுது மொழித் தூய்மைக் கேடு ஏற்பட்டு மொழி அழிவு ஏற்படும். ஒரு காலத்தில் அதிகமான சமற்கிருதச் சொற்கள் தமிழில் கலக்கப் பெற்றன. தமிழில் அதிகமான சமற்கிருதச் சொற்கள் கலந்தால் தமிழுக்கு அணி சேர்க்கும் என்று பொய்யுரையும் பரப்பப்பட்டு, அவ்வாறு கலந்து எழுதும் நடையை மணிப்பவழ நடை என்றும் கூறப்பெற்றது. மணியும் பவழமும் கலந்தது போல அந்நடை உளதாம். எ.கா.:

1. மணவாள மாமுனிகள் தமக்காசார்யரான பிள்ளையுடைய ப்ரஸாதத்தாலே,க்ரமாகதமாய் வந்த அர்த்த விசேஷங்களைப் பின்புள்ளருமறிந்து உஜ்ஜீவிக்கும்படி, ப்ரபந்தரூபேண உபதேசித்து ப்ரகாசிப்பிக்கிறோமென்று ச்ரோத்ரு புத்தி ஸமாதாநார்த்தமாக ப்ரதிஜ்ஞை பண்ணியருளுகிறார்"

2. "பிரகிருதி மாயையினின்றுஞ் சிருட்டி முறை பற்றிக் குணதத்துவ முதல் வைத்தெண்ணப்படும் போக்கிய தத்துவ மிருபத்து நாலுந் தோன்றும். இஞ்ஞனஞ்

சடரூபமான விந்து மோகினி மூன்றுந் தத்தங் காரியங்களைச் சிவசக்தி சங்கற்பரூப சந்நிதியினின்றுந் தோற்று விக்கும்" பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பாதியில் இவ்வாறுதான் தமிழில் நூல்கள் எழுதப்பெற்றன. இவ்வாறு மிக நீண்ட காலமாகவே தமிழில் வடமொழி கலந்து எழுதவும் பேசவும் முற்பட்டதன் விளைவாகவே தமிழிலிருந்து தெலுங்கு மலையாளம் துளுவம், கன்னடம், குடம், கோண்டு, முதலான திரவிட மொழிகள் உ ரு வ ா கி ன .

ஒரு மொழி இன்னொரு மொழியோடு கலக்கின்ற பொழுது புதியமொழி ஒன்று உருவாகிவிடும். இதனைA + B = C எனும் கணக்கியலாக மொழி அறிஞர்கள் வகுத்துள்ளனர். இவ்வாறு புதிதாக உருவாகின்ற மொழியை "பிஜின் மொழி" என்று மொழி ஆய்வாளர்கள் கு றி ப் பி டு கி ன் ற ன ர் . ஒரு நாட்டை வல்லாண்மை செய்ய வந்த இனத்தாரின் மொழியும் அந்த நாட்டின் பழங்குடி மக்கள் பேசும் மொழியும் கலக்கின்ற பொழுது "கிரியோல்" எனப்படும் மொழி உருவாகின்றது. கிரியோல் வகையைச் சேர்ந்த மொழிகள் பல இடங்களில் உருவாகியுள்ளன. மொரிசியசில் பிரஞ்சுமொழியும் தமிழும் கலந்த கிரியோல் மொழியைத் தமிழர்கள் பேசிக் கொண்டுள்ளனர். இது அவர்களின் வீட்டு மொழியாகவே ஆகிவிட்டது. உருசியாவில் உருசிய மயமாக்கல் (Russiafi–cation) நடத்தப்பெற்ற பொழுது உருசியாவிலுள்ள துருக்கி மொழி முற்றுமாகச் சிதைக்கப்பெற்றது. உருசிய துருக்கியர்களை உருசியர்களாக மாற்ற முயலுகின்ற வகையில் சார் மன்னர் காலத்திலும் பின்னர் பொதுவுடைமையர் காலத்திலும் துருக்கி மொழி சி ை த க் க ப் ெ ப ற் ற து .

ஒரு மொழியைச் சார்ந்த வட்டார வழக்குகளைத் தனிமொழிகளாக மாற்றி அமைக்கின்ற வகையிலும், அம்மொழியின் தனித்தன்மை பொருந்திய வரிவடிங்களை மாற்றி அமைக்கின்ற வகையிலும் அம்மொழியோடு வல்லாண்மையர் மொழியின் சொற்களை வரைதுறையின்றி கலப்பதின் வகையிலும் மொழிச் சிதைவினை ஏற்படுத்திவிட முடியும். இவ்வாறு உருசியாவிலுள்ள துருக்கி மொழி தாய்நிலத்திலிருந்து வேறுபிரிக்கப்பட்டு உருசிய மயமாக்கப்பட்டது. "ஓர் இனத்தை அழிக்க வேண்டுமாயின் அவ்வினத்தின் மொழியை அழித்துவிடு" எனும் செர்மானிய பழமொழியை இங்கு நாம் நினைவு கூர்வது மிகவும் பொருத்தமாகும். ஒரு காலத்தில் "நாவலந் தண்பொழில்" என்று சொல்லப்பெற்ற இந்தியா முழுமையிலும் தமிழே ஆட்சிமொழியாக, ஆளுமை மொழியாக இருந்தது. இன்று அது தமிழ்நாட்டோடு சுருங்கிவிட்டது. மக்கள் தொகை குறைவு, நாட்டெல்லைகள் சுருக்கம் முதலான பேரிழப்புகளும் மொழி அழிவால் ஏற்படும் என்பதற்குத் தமிழ்நாட்டு எல்லைச் சுருக்கமே மிகப்பெரிய சான்றாகும். உருசியாவில் துருக்கி மொழிக்கு நேர்ந்த தாக்கம் தமிழுக்கு மிக நீண்ட காலமாகவே நேர்ந்து வருகின்றது. இருப்பினும் தமிழின் உயிர்த்துடிப்பை எவராலும் முற்றிலுமாக நிறுத்திவிட முடியவில்லை. அதற்குக் காரணம், அவ்வப்போது தமிழைக் காக்கும் காவலர்களாகத் தமிழிய அறிஞர்கள் தோன்றி காப்புப் பணிகளை மேற்கொண்டதேயாகும். இவ்விடத்தில் தனித்தமிழ்த்தந்தை மறைமலையடிகள், மொழிஞாயிறு பாவாணர், பாவலரேறு பெருஞ்சித்திரனார் முதலான தனிப்பெருந்தமிழ் மீட்பர் களை நாம் மறந்துவிட முடியாது.

தமிழில் சமற்கிருத மொழியைக் கலந்ததன் விளைவாகப் பிறந்த மொழிகளான தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலான மொழி அறிஞர்களிடம் கூட மொழித்தூய்மையைப் பேண வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கி இருந்தது என்னும் செய்தி மொழிக்கலப்பை ஏற்கும் தமிழருக்கு நாணுந் தன்மையை உருவாக்க வல்லதாக இருக்கின்றது. அங்கேயும் மறைமலையடிகளைப் போன்றோர் ே த ா ன் றி யு ள் ள ன ர் .

கன்னட மொழியில் சமற்கிருதச் சொற் கலப்பை நிருபதுங்க வருமன் எனும் "இராட்டிர கூட" மன்னன் கடுமையாக எதிர்த்துள்ளான்.சமற்கிருதம் கலவாத தனிக்கன்னடத்தை "திருள் கன்னடம்" என்றும் "அச்ச கன்னடம்" என்றும் அழைத்துள்ளனர். இத்தகு திருள் கன்னடத்தைப் பேணாமல் சமற்கிருதச் சொற்களைக் கலப்பது சுடு பாலில் மோரை ஊற்றுவது போலத் தீமை பயக்கும் செயலாகும் என்று நிருபதுங்கவருமன்

கண்டித்துள்ளார்.

"தரிசந்தா சக்கதமும நறியதெ கன்னடமும் சமா சோக்திகளொள் குரிது பெரிசிதொடெ விரசம் மருகுவ பால்கெ அளெய பனிகளம் – பெரசிதெவால்"

நயசேனன் எனும் கன்னடப் புலவர் கன்னட மொழியில் சமற்கிருதச் சொற்களைக் கலந்து எழுதுபவனை "ஒரு பாவலனா?" என்று கடுமையாகக் கேட்டு அவ்வாறு கலந்து எழுதுவது பாலில் எண்ணெயைக் கலப்பது போன்ற கூடாத செயல் என்று கடிந்துரைக்கின்றார்.

"சக்கதனிக்குவவனும் கவியோ" ..சுத்த கன்னடதொள்தந் திக்குவதே சக்கதமம் தக்குதே பெசல்கெ க்ருதமுமம் தைலமுமம்"

கன்னடத்தைத் தவிர்த்து தெலுங்கிலும் "அச்சதெலுங்கு" எனும் பெயரில் தனித்தெலுங்கு பேணப்பட்டது. பிறமொழி கலவாத அச்ச தெலுங்கு பேணப்பட்டது. பிறமொழி கலவாத அச்ச தெலுங்கு நிகண்டுகள் தெலுங்கில் இயற்றப்பட்டன. 1887இல் "ஆந்திர பதபாரி ஜாதம்" எனும் அச்சதெலுங்குநிகண்டு வெளியிடப்பெற்றது. "லட்சுமி நாராயணீயமு" "ஆந்திர பாஷார்ணவமு" முதலானவை அச்சதெலுங்கு நிகண்டுகளே.

தனித்தன்மை பொருந்திய மலையாளத்தைப் பச்ச மலையாளம் என்பர். "நில்கும் ஈநில் நில்காதே நீங்ஙி முன்னோட்டுப் போவுக பிடிச்சு தள்ளும் அல்லெங்கில் பின்னில் நின்று வருந்நவர்"

எனும் மலையாள மறுமலர்ச்சிப் பாவலரான குமரன் ஆசானின் பாடலில் ஒரு சொல்கூட சமற்கிருதமில்லை. தமிழின் திரிபாகவே இப்பாடல் இருப்பதை நாம் காணலாம்.

"நில்லுங்கள், நீங்கள் முன்னேறாமல் நின்று விட்டால் பின்னால் வருபவர்கள் உங்களைப் பிடித்துத் தள்ளி விட்டு முன்னே போய் விடுவார்கள். நீங்கள் பின்னால் வருந்த வேண்டி வரும்"என்பதே அப்பாடலின் தமிழ் விளக்கமாகும். எனவே தமிழிலிருந்து பிரிந்து போனவரெல்லாம் சமற்கிருதம் கலவாமல் தம்மொழி வாழ வேண்டும் என்று நினைக்கும்போது தமிழ் தனித்தமிழாக விளங்க வேண்டும் என்று தமிழர்கள் எண்ணுவதில் தவறேதும் இல்லை. இன்றைய சூழலில் சமற்கிருதத்தைவிட ஆங்கிலமும் மலாயும் கலந்த புன்மொழியைத் தமிழாகக் கருதி கற்றவரும் கல்லாதவரும் மற்றும் பலரும் பேசி வருவது மலேசியத் தமிழின் எதிர்கால வளர்ச்சிக்கு ஆக்கமாகத் தெரியவில்லை.
"தமிழன், "பாசார் மாலமுக்குச்" செல்கிறான் "பாசாரில்" "சாயோர்" வாங்குகிறான். இரவில் "டின்னர்" எடுக்கிறான். "பஸ்ஸிலும் டாக்சியிலும் பைசிக்கலிலும் டிரவல் பண்ணுகிறான். அவனுக்கு டாடியும் மம்மியும் உள்ளனர். பக்கத்தில் அங்கிலும், அண்டியும் இருக்கின்றனர். ஈக்கான் பூஜுரை பொரித்து சாப்பிடுகின்றான். ஹாலில் மீட்டிங் போட்டு மைக் டெஸ்டிங் ஒன் டூ த்ரி பன்னுகிறான். அவன் பிள்ளைகள் ஸ்கூலுக்குப் போய் புக்கு ஹந்தாரர் பன்னுகிறார்கள்."
நாம் தூங்கி விழித்ததிலிருந்து இரவு படுக்கும் வரைக்கும் பேசுகின்ற பொழுது எத்தனை பிறமொழிச் சொற்களைக் கலந்து பேசுகின்றோம் என்பதைப் பட்டியலிட்டுப் பார்த்தால்தான் தெரியும் நாம் பேசுவது தமிழா கலவை மொழியா என்று.
"போரஸ் அனிமல்லா சேவ் பன்னுன்னா ரோட்டுல பாஸ்டாட்ரைவ் பன்னக் கூடாது"

இது இன்று வழக்கில் வந்து கொண்டிருக்கும் புதுவகையான மணிப்பவழ நடை. நாம் உண்ணும் உணவில் நஞ்சு கலந்து விட்டால் நச்சுணவு என்கிறோம். உடனே தள்ளி வைக்கிறோம். குடிக்கும் நீர் மாசு அடைந்து விட்டால், குடிக்க நம் மனம் விரும்புமா? சுற்றுச்சூழல் மாசடைந்து விட்டால் நமக்கு பல்வேறு நோய்கள் வந்து சேர்கின்றன. எனவே அதைத் தூய்மையாக்க பல்வேறு நடவடிக்கைகள் எடுக்கிறோம். நாம் மூச்சு விடும் காற்று தூய்மையாக இருப்பது மிக மிக இன்றியமையாதது. "சுற்று புறத்தூய்மைக்கேடு முதலானவை எப்படி மாந்த வாழ்வைச் சீரழித்து விடுமோ, அப்படித்தான் ஓர் இனத்தை அடையாளம் காட்டிக் கொண்டிருக்கின்ற, அவ்வினத்தின் ஒட்டுமொத்த மனமாக விளங்குகின்ற மொழியைக் கலப்பால் மாசுபடுத்துவது அவ்வினத்தையே சீரழித்து விடும். எனவேமொழித்தூய்மை பேணி இனத்தைப் பாதுகாப்போம்!

# தொல்காப்பியத்திலும் வள்ளுவத்திலும் 'தொல்'; சொற்பொருண்மை ஒப்பீடு



முனைவர் ப. கொழந்தசாமி,

அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

செய்யுளும் வழக்கும் என்னும் இரண்டு வகைத் தமிழ்ப் பயன்பாட்டோடு, முந்து நூல் கண்டு முறைப்படி ஆய்ந்து ஆக்கப்பட்ட, விளக்கவியல் இலக்கணமான தொல்காப்பியத்தை வள்ளுவர் பொன்னேபோற் போற்றி அனைத்து நிலைகளிலும் எடுத்தாண்டுள்ளார். இது தொல்காப்பியத்தின் சீர்மிகு தாக்கமாகும். அம் முறையில் தொல் என்னும் பண்பாட்டு மானுடவியல் கலைச்சொல் ஒப்பிடத்தக்கது. எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று அதிகாரங்களிலும் , பின்வருகின்ற நூற்பாக்களில் தொல் எனும் சொல் பழமை/முன் என்னும் பொருளில் பயில்கின்றது: சொல் பொருள் வேற்றுமை மயங்கியல் புறத்திணையியல் பொருளியல் செய்யுளியல்

| அதிகாரம் | இயல் | இயல் நூற்பா எண் |
|---|---|---|
| எழுத்து | புள்ளி மயங்கியல் | 60 |
| எழுத்து | குற்றியலுகரப் புணரியல் | 04 |
| சொல் | வேற்றுமை மயங்கியல் | 18 |
| சொல் | வேற்றுமை மயங்கியல் | 27 |
| சொல் | எச்சவியல் | 53 |
| பொருள் | புறத்திணையியல் | 12 |
| பொருள் | புறத்திணையியல் | 21 |
| பொருள் | களவியல் | 22 |
| பொருள் | கற்பியல் | 05 |
| பொருள் | கற்பியல் | 06 |
| பொருள் | கற்பியல் | 27 |
| பொருள் | கற்பியல் | 31 |
| பொருள் | பொருளியல் | 31 |
| பொருள் | செய்யுளியல் | 52 |
| பொருள் | செய்யுளியல் | 190 |
| பொருள் | செய்யுளியல் | 238 |

திருக்குறளில் 762, 806, 1043, 1234,1235 ஆகிய குறட்பாக்களில் தொல் எனும் சொல் பழமை/முன் என்னும் பொருளில் பயில்கின்றது; சான்றாக,

உலைவிடத்து ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லால் அரிது (762)

என்னும் குறளைக் கருதலாம். நீண்ட அனுபவமும், தொடர்ந்த பயிற்சியும் உள்ள மூலப்படையினர் தோல்வியைக் கண்டு அஞ்சிப் பின்வாங்கமாட்டார் என்னும் கருத்து இக் குறட்பாவில் அமைகின்றது, இவ்வாறே மற்ற குறட்பாக்களும்.

மரபையும் தொன்மையையும் போற்றுகின்ற தமிழ்ச் சமுதாயத்தில் இத்தகைய சொல் தொடர்ந்து இயல்வது இயல்பே; இன்றைய வழக்கிலும் இதே பொருளது. இவ்வாறாக, பண்பாட்டு மானுடவியல் கலைச்சொல்லான தொல்லைத் தொல்காப்பியத்தை அடியொற்றி வள்ளுவமும் ஒத்த பொருளில் ஆண்டுள்ளது. இது ஒருமொழி ஒப்பீட்டிற்கும், மொழி வரலாற்றுக்கும், சொற்பொருண்மை ஆய்வுக்கும் அடித்தளமாகின்றது.



# நிகண்டு – தோற்றம்



முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன்,
இணைப்பேராசிரியர் – தமிழ்த்துறை
தொலைநிலை (ம) இணையவழிக் கற்றல் மையம்
வேல்ஸ் அறிவியல் தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனம், பல்லாவரம்,
சென்னை – 600 117

முனைவர் வை. சிவநேசன்,
முதுகலை தமிழாசிரியர்,
அரசு மேல்நிலைப்பள்ளி,
மொறப்பாக்கம்,
செங்கல்பட்டு மாவட்டம்

## நிகண்டு – பெயர்க்காரணம்

நிகண்டு முதன்முதலில் வடமொழியில் வேதத்திற்கு அங்கமாய், வைதீகச் சொற்களின் பொருள்களை உணர்த்தும் கருவி நூலுக்கு மட்டுமே சிறப்பாக வழங்கப்பெற்று வந்துள்ளது. காலப்போக்கில் சொற்பொருள் உணர்த்தும் நூல்களுக்கெல்லாம் இப்பொதுப்பெயர் வழங்கப்பட்டது. வேதாங்கம் என்பது வேதத்தின் ஆறு உறுப்பு. அவையாவன: 1. சிட்சை 2. சந்தசு 3. நிருக்தம் 4. வியாகரணம் 5. கற்பம் 6. சோதிடம். இவற்றுள் சிட்சை என்பது எழுத்துகளின் உச்சரிப்புப் பற்றியது; சந்தசு என்பது யாப்புப் பற்றியது; நிருக்தம் என்பது சொற்பிறப்புப் பற்றியது; வியாகரணம் என்பது இலக்கணம் பற்றியது; கற்பம் என்பது சடங்கு பற்றியது. இவற்றுள் சொற்பிறப்புப் பற்றியதான 'நிருக்தம்' என்பதே நிகண்டுப் பொருளைக் கூறுகிறது. இந்த 'நிருக்தம்' என்னும் சொல் 'நிருத்தம்' என்று மணிமேகலையில் எடுத்தாளப்பட்டுள்ளது.

> கற்பம் கை சந்தம் கால் எண் கண்
> தெற்றென் நிருத்தம் செவி சிக்கை மூக்கு
> உற்ற வியாகரணம் முகம் பெற்று
> (மணி. 27:100–102)

இதற்கான உரையிலும் "வைதிகச் சொற்களை யாராய்தற்குக் கருவியாதலின், 'தெற்றென் நிருத்த' மெனப்பட்டது" என விளக்கப்பட்டுள்ளது.

தமிழ்ப் பேரகராதியும் 'நிருத்தம்' என்னும் சொல்லிற்கு வேதாங்கம் ஆறனுள் வேதங்களிலுள்ள சொற்களை ஆராயும் நூல் என்று பொருள் தருகிறது.

திவாகரம்,

> ஆறு அங்கம் மந்திரம் வியாகரணம் நிகண்டு சந்தோபிசிதி நிருத்தம் சோதிடம் (திவா. 2371)

என்றும், பிங்கலந்தை,

> மந்திரம் சூத்திரம் வியாகரணம் நிகண்டு
> சந்தோபிசிதம் நிருத்தம் சோதிடம்
> என்றன வேதத்து ஆறு அங்கம் என்ப
> (பிங். 402)

என்றும் ஆறு அங்கங்களைக் குறிப்பிடுகின்றன. இந்நூற்பாக்களில் காணப்படும் சந்தோபிசிதி, சந்தோபிசிதம் என்பன சந்தசு ஆகும். மந்திரம் என்பது கற்பம் ஆகும். திவாகரரும் பிங்கலரும் நிருத்தத்தைப் பயன்படுத்தியுள்ளதோடு 'நிகண்டு' என்னும் சொல்லையும் பயன்படுத்தியுள்ளனர். இவர்கள் நிகண்டு என்னும் சொல்லை அறிந்திருந்த போதிலும் தாங்கள் இயற்றிய நூல்களுக்கு நிகண்டு என்னும் பெயர் வைக்காததன் காரணத்தை மு. அருணாசலம், "திவாகரர் சைவர்... ஆகவே வைதிக சமயத்தார் வேதத்தின் அங்கத்திற்குக் கூறிய பெயரைத் தாம் முதன் முதலாகச் செய்கின்ற ஒரு நூல் வகைக்குப் பெயராக அமைத்துக் கொள்ள அவர் விரும்பவில்லை. ஆகவே தெரிந்தேதான் இதற்கு அப்பெயர் வைக்கவில்லை என்பது நன்கு புலப்படுகிறது" என்கிறார்.

நிருத்த நூல்களை வடமொழியில் பலர் இயற்றியதால் அவரவர் நூலிற்கு அங்கமாய் நிகண்டு நூல்களும் பல தொகுக்கப்பட்டிருந்தன. அவற்றுள் இப்போது நிலைத்து நிற்பது யாஸ்கர் இயற்றிய நிருத்தம்

மட்டுமே ஆகும். இதன் காலம் கி.மு. 700க்கு முற்பட்டது என்று வே. ராகவனும் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு என்று மு. அருணாசலமும் கி.மு. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டு என்று செ.வை. சண்முகமும் கருதுகின்றனர். இது 1. நைகண்டுகம் 2. நைகமம் 3. தைவதம் என்னும் மூன்று காண்டங்களை உடையது. இவற்றுள் முதல் காண்டமான நைகண்டுகம் என்னும் பெயர் நிகண்டு என்னும் சொல்லிலிருந்து பிறந்ததாகும். இது ஒருபொருள் பல்பெயர்த் தொகுதியாய் அமைந்துள்ளது.

இரண்டாவது காண்டமான நைகமம் என்னும் பெயர் நிகமம் என்னும் சொல்லிலிருந்து பிறந்ததாகும். இது ஒருசொல் பல்பொருள் தொகுதியாய் அமைந்துள்ளது. மூன்றாம் காண்டமான தைவதம் என்னும் பெயர் தெய்வம் என்னும் சொல்லிலிருந்து பிறந்ததாகும். இது வேத தேவதைகளின் பெயர்த் தொகுதியாய் அமைந்துள்ளது. முதல் காண்டத்தின் பெயரான நைகண்டுகம் எனும் சொல்லுக்கு மூலமாக விளங்கும் நிகண்டு என்பதே வடமொழி உள்ளிட்ட இந்திய மொழிகளில் சொற்பொருள் கூறும் நூல்களுக்கெல்லாம் பொதுப்பெயராய் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. தமிழும் இதற்கு விதிவிலக்கு அன்று.

## நிகண்டு – இலக்கணம்

இலக்கிய வரலாற்றில் நிகண்டு நூல்களை இலக்கிய நூல்களோடு சேர்த்துச் சொல்வது பொருத்தமா? அல்லது இலக்கண நூல்களோடு சேர்த்துச் சொல்வது பொருத்தமா? என்று பார்க்கும்போது நிகண்டு நூல்களை இலக்கண நூல்களோடு சேர்ப்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது. இதற்குப் பல்வேறு ஆய்வறிஞர்கள் தக்கச் சான்றுகளுடன் முடிவையும் தெரிவித்துள்ளனர்.

மு. அருணாசலம், "இலக்கணம் எடுத்த ஒவ்வொன்றையும் வரையறுத்துக் கூறுவது; நிகண்டும் சொற்பொருளை வரையறுத்துக் கூறுகிறது. ஆகவே, அதையும் இலக்கணம் என்ற தலைப்பில் பொருத்திப் பேசுவதில் பிழையில்லை" என்கிறார்.

சொற்பொருள் விளக்கத்தை இலக்கணத்தின் பகுதியாகவே தொல்காப்பியர் கொண்டார் என்பதற்கு வேறு அகச்சான்றுகளும் உள்ளன என்கிறார் க. பாலசுப்பிரமணியன். மேலும், "உரிச்சொல் பற்றி பேசும் முன்பே (எழுத்ததிகாரம், கிளவியாக்கம் முதலான இயல்களில்), சொற்பொருண்மை இலக்கண அமைப்பைப் பாதிப்பதையும் அதனால் பாதிக்கப்படுவதையும் காட்டியிருப்பது சொற்பொருண்மைக்கு இலக்கணத்தில் உள்ள பங்கை அவர் நன்கு உணர்ந்திருந்தார் என்பதையும் அதனை இலக்கணத்தின் கூறாகவே கருதினார் என்பதையும் புலப்படுத்துகின்றன. இவ்வாறு, இலக்கணத்தின் பகுதியாக அமைந்த சொற்களஞ்சியம் பற்றிய செய்திகள் பின்னர் அகராதி என்ற தனிநூலாக வகுக்கப்பெற்ற இலக்கணத்தின் பகுதியாக வருவது மட்டுமன்றி இலக்கியக் கல்வி, இலக்கியப் படைப்பு மற்றபிற துறைக்கல்வி ஆகியவற்றிற்கும் பயன்படும் அடிப்படையில் வளர்ந்து நிற்கின்றது" என்கிறார் அவர்.

## நிகண்டு – தமிழ்ச்சொல்லா?

நிகண்டு என்னும் சொல்லைத் தமிழ்ச்சொல் என்று நிறுவும் முகத்தான் பலரும் பல்வேறு கருத்துகளைப் பதிவு செய்துள்ளனர். அவற்றைக் கீழ்வருமாறு காணலாம்.

"நிகண்டு என்னும் சொல்லின் பொருள் 'உண்மை' எனவே தெரிகிறது. இதனை ஆய்ந்தால் 'நிகழ்ந்தது' என்ற சொல் உலக வழக்கில் இவ்வாறு மருவித் திரிந்து வழங்கியதென்று கொள்வதே பொருத்தம் ஆகும். நாட்டில் நிகழும் சொற்களை இன்ன சொல்லுக்கு இன்ன பொருள், இன்ன பொருளுக்கு இன்ன பெயர் எனக் கண்டு அவ்வுண்மையை வரைந்த நூல்தான் நிகண்டு எனப் பெயர் பெற்றது போலும்" என்கிறார் மு. அருணாசலம்.

"நீளம் என்பதை நிகளம் எனவும் நீண்டது என்பதை நிகண்டது எனவும் பேச்சு வழக்கில் மக்கள் சிலர் சொல்வதைக் கேட்கலாம். நிகளம் என ஒருசார் செய்யுள் வழக்கும் உண்டு. இந்த வழக்குகளையொட்டிப் பார்க்குங்கால், நிகண்டு என்னும் சொல்லுக்கு, நீண்டது என்று பொருள் கொள்ளலாம். சொற்களின் பட்டியல் நிகண்டு (நீண்டு) கொண்டு போதலின் 'நிகண்டு' என்னும் பெயர் கொடுக்கப்பட்டிருக்கலாம். நிகளுவது நிகண்டு" என்கிறார் சுந்தர சண்முகனார்.

நிகண்டு என்னும் சொல் வடமொழியிலிருந்து தமிழில் வந்து நிலைபெற்ற சொல் என்று பல ஆய்வறிஞர்கள் கருதுகின்றனர். அவற்றைக் கீழ்வருமாறு காண்போம்.

"கூட்டம் அல்லது தொகுதி எனப் பொருள்படும் நிகண்டு என்னும் வடசொல், புராணம், பிரபந்தம் போன்ற சொற்களைப்

போலத் தமிழில் காலூன்றி நிலைத்த சொல் எனக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது. மொழியில் நிகண்டு மரபு நன்கு வளர்ந்ததற்குப் பிறகு இச்சொல்லின் செல்வாக்காலும் தாக்குரவாலும் இதனைத் தமிழ் உலகம் ஏற்றுக் கொண்டிருக்கக் கூடும். 'நிகண்டு' என்பது தமிழ்ச்சொல் என நிறுவ முனைவது வலிந்து கோடலாகத் தோன்றுகிறது" என்கிறார் வ. ஜெயதேவன்.

"சமசுகிருதத்தில் சொற்றொகுதி எனப் பொருள்படும் நிகண்டு எனும் சொல், சொற்பொருள் கூறும் நூலுக்காகியது. இச்சொல் தமிழைவிட அம்மொழியில்தான் தொன்றுதொட்டு வழங்கி வந்துள்ளது. இவ்விரு மொழிகளுள் சமசுகிருதத்தின் தாக்குரவுக்குப் பின்னரே 'நிகண்டு' என்ற இச்சொல்வழக்கு தமிழில் மிகுதியும் இடம் பெறலாயிற்று எனக் கூறலாம். தமிழும் சமசுகிருதமும் பழங்காலத்திலிருந்தே ஒன்றுக்கொன்று தொடர்புற்றிருந்த மொழிகளாகும். தமிழிலிருந்து பல சொற்கள் சமசுகிருதத்திற்குச் சென்று நிலை பெற்றுவிட்டன. இதுபோலவே சமசுகிருதத்திலிருந்தும் பல சொற்கள் தமிழில் வந்து வழங்கி நிலைபெற்றுவிட்டன. குறிப்பாக இலக்கிய உலகில் வந்து கலந்துள்ள சில சொற்களை நினைவு கூறலாம். அத்தியாயம், அந்தாதி, அர்த்தம், உதாரணம், காவியம், பிரபந்தம், புராணம், புஸ்தகம், வர்க்கம், வார்த்தை, வாக்கியம், வியாக்கியானம் போன்ற சொற்கள் அவ்வகையில் தமிழில் வந்து கலந்த சொற்களுள் சிலவாகும். இவற்றைப் போன்று நிகண்டு என்ற சொல்லும் தமிழில் வந்து வழங்கிக் காலூன்றி நிலைபெற்றுவிட்டது என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது" என்கிறார் மா. சற்குணம்.

"சென்னைப் பல்கலைக்கழக அகராதியிலும் நிகண்டு < nighantu என வடசொல்லே இதன் மூலமாய்க் காட்டப்பட்டுள்ளது. எனவே மு. அருணாசலம் போன்றோர் கருதுவதைப்போல் இதை வடசொல்லாய்க் கொள்வதே ஏற்புடையதாய் உள்ளது" என்கிறார் பெ. மாதையன்.

கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் தோன்றிய சூடாமணி நிகண்டு தன் நூற்பெயரில் நிகண்டு என்னும் பெயரைக் கொண்டுள்ளது. ஆனால் இதற்கு முந்தைய நிகண்டுகளான திவாகரம், பிங்கலந்தை ஆகியன நிகண்டு என்னும் பெயரை நூற்பெயராகக் கொள்ளவில்லை. எனவே நிகண்டு என்னும் சொல் தமிழில் இடம்பெற்றது பிற்காலத்தில்தான். 'நிகண்டு' என்னும் சொல்லைத் தமிழ்ச்சொல் என்று கருதுவதைவிட வடமொழியிலிருந்து தமிழில் வந்து கலந்து நிலைபெற்ற சொல் என்று கருதுவதே பொருத்தமானதாகும்.

## நிறைவாக

இலக்கிய வரலாற்றில் நிகண்டு நூல்களை இலக்கணத்தோடு பொருத்திக் கொள்ளலாம்.நிகண்டு முதன்முதலில் வடமொழியில் வேதத்திற்கு அங்கமாய், வைதீகச் சொற்களின் பொருள்களை உணர்த்தும் கருவி நூலுக்கு மட்டுமே சிறப்பாக வழங்கப்பெற்று வந்துள்ளது. காலப்போக்கில் சொற்பொருள் உணர்த்தும் நூல்களுக்கெல்லாம் இப்பெயர் வழங்கலாயிற்று.

நிகண்டு என்னும் சொல்லைத் தமிழ்ச்சொல் என்று கருதுவதைவிட வடமொழியிலிருந்து வந்து கலந்து நிலைபெற்ற சொல் என்று கருதுவதே பொருத்தமானதாகும். முற்காலத்தில் சொற்பொருள் உணர்த்தும் கருவி நூல்களை உரிச்சொல், உரிச்சொற் பனுவல் என்று வழங்கி வந்த மரபு கி.பி. பதினாறாம் நூற்றாண்டிற்குப் பின் நிகண்டு என்னும் சொல்லாட்சி வழங்கப்பட்டு மீண்டும் கி.பி. 20ஆம் நூற்றாண்டில் உரிச்சொற் பனுவல் என்று வழங்கப்பட்டுள்ளது.

நிகண்டு என்னும் சொல்லாட்சி முதன்முதலில் இறையனார் அகப்பொருள் உரையில் இடம் பெற்றுள்ளது.

தொல்காப்பியத்தின் உரியியலே நிகண்டு தோற்றத்திற்கு அடிப்படையாய் அமைந்து அதன் அடிப்படையிலேயே கி.பி. எட்டாம் நூற்றாண்டில் திவாகரம் தோன்றியது எனலாம்.

திவாகரத்திற்கு முன்னர் பல நிகண்டுகள் தோன்றியிருக்கவேண்டும் எனக் கருதும்படியாகச் சில நிகண்டுக் குறிப்புகள் இலக்கணம், இலக்கியம், உரை, உரைமேற்கோள்கள் வழி அறிந்துகொள்ள முடிகிறது. அவை எந்த நிகண்டு நூலுக்கு உரியவை என்றும் அறிய முடியவில்லை.

அயலவர் ஆட்சியால் ஏற்பட்ட மொழிக் கலப்பும், தமிழ் இலக்கியப் பரப்பில் ஏற்பட்ட பல மாற்றங்களும், மதப் பூசல்களுமாகப் பல்வேறு நிலைகளில் ஏற்பட்ட மாற்றங்கள் நிகண்டு நூல்கள் தோன்றக் காரணமாய் இருந்துள்ளன. கி.பி. எட்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. இருபதாம் நூற்றாண்டு வரை பல்வேறு நிகண்டு நூல்கள் தோன்றியுள்ளன.

ஆரிய நிகண்டு, பொதிய நிகண்டு முதலான பல்வேறு நிகண்டு நூல்கள் பெயரளவில் மட்டுமே அறியப்படுகின்றன. சிலவற்றிற்கு நூல் இயற்றிய ஆசிரியர் பெயர் மட்டும் அறியப்படுகின்றன.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 143–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 143 ஆவது கூட்டம் 18.10.2023 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு.அ.மதிவாணன், மேனாள் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா. பூங்குன்றன், முனைவர் இரா.கு. ஆல்துரை ஆகியோர் பங்கேற்றனர். மேலும், முனைவர் ஆ.அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 216 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளித்த கலைச்சொற்களுள் சில:

Ameboid shape – கண்ணறை வடிவம்
Anti haul –எதிர்பரப்புரை
Athou –கூட்டிழையுணா
Crypto winter –மின்பணச் சுணக்கம்
Doughnut city –புறநகர் வாழிடம்
Green noise –வல்லோசை
Resilience hub –பேரிடர் மீட்பு நடுவம்
Situationship – சூழல் நட்பு
Shortcut icon – குறுக்கு விசைக் குறி
Smart Art – திறன் கலை

# தமிழ்க் கலைக்கழகத்தின் 144–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்க் கலைக்கழகத்தின் 144–ஆவது கூட்டம் 31.10.2023 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன், திரு. நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 222 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:**

| | | |
|---|---|---|
| Heat shrinkage | – | வெப்பச்சுருக்கம் |
| Internet presence | – | இணைய இருப்பு |
| Liquor Amnii | – | பனிக்குட நீர்மம் |
| Metal primer | – | மாழைக்காப்புப் பூச்சு |
| Papillitis | – | விழிநரம்பு அழற்சி |
| Pragmatic strategy | – | நடைமுறை உத்தி |
| Proactive investigations | – | நேரிய உசாவல் |
| Proactive monitoring | – | நேரிய கண்காணிப்பு |
| Proactive risk | – | கடும் இடர்வாய்ப்பு |
| Professional society | – | தொழில்சார் சமூகம் |
| Public pulse | – | மக்கள் மனநிலை |
| Rapid fire pistol | – | விரைவு கைத்துமுக்கி |
| Realistic estimate | – | உண்மை மதிப்பீடு |

# தமிழ் அகராதியியல்நாள் விழாப் போட்டிகள் எதிர்கால அகராதியியல் அறிஞர்களையும், கலைச்சொல்லாக்க வல்லுநர்களையும் உருவாக்கும்! அகரமுதலி இயக்குநர் நம்பிக்கை!







தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 2023ஆம் ஆண்டிற்கான, "தமிழ் அகராதியியல் நாள் விழாவை"யொட்டி, பள்ளி மாணவர்களுக்கு மாநில அளவிலான கலைச்சொல்லாக்கப் போட்டி மற்றும் ஓவியப் போட்டி பள்ளிக்கல்வித்துறையோடு இணைந்து 30.10.2023ஆம் நாள் சிறப்பாக நடத்தப்பெற்றன. வெற்றியாளர்களுக்கு முதற்பரிசாக ரூ.10,000மும், இரண்டாம் பரிசாக ரூ.5,000மும் வழங்கப்படவுள்ளன.

## வெற்றியாளர்கள்

### கலைச்சொல்லாக்கப் போட்டி

முதற்பரிசு



**கா. முகிலரசன்**
திருமுருக கிருபானந்த வாரியார்
அரசு ஆண்கள் மேல்நிலைப்பள்ளி,
அம்மையார்குப்பம்,திருவள்ளூர் மாவட்டம்

இரண்டாம் பரிசு



**மா. கலைச்செல்வி**
புனித சின்னப்பர் மகளிர்
மேல்நிலைப்பள்ளி, மயிலாடுதுறை

### ஓவியப் போட்டி

முதற்பரிசு



**வெ. புஷ்பலதா**
அரசு மகளிர் மேல்நிலைப்பள்ளி
போரூர், சென்னை

இரண்டாம் பரிசு



**தி. சந்தோஷ்ராஜ்**
தியாகராசர் நன்முறை மேல்நிலைப் பள்ளி
மதுரை

போட்டிகளின் நிறைவில் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், "மொழிநலம் காப்பதில் அகராதிகள் முகாமையான பங்காற்றுகின்றன. சொற்களின் பொருள் எந்தளவுக்குத் தெரிந்திருக்கிறதோ அந்தளவுக்கு நம் மொழியாளுமையும், படைப்பாளுமையும் மிளிரும். இன்றைய சூழலில் மொழியின் சொல்வளம் பெருக்குவதற்கும், பிறமொழிக் கலப்பைத் தவிர்த்து, தூயதமிழ்ச் சொற்களைப் புழக்கத்திற்குக் கொண்டு வருவதற்கும் கலைச்சொல்லாக்கம் தேவையாக இருக்கிறது. எனவே எதிர்காலத்தில் மொழிநலம் காக்கும் அகராதியியல் அறிஞர்களையும், மொழியாளுமைமிக்க படைப்பாளர்களையும், மொழிவளத்துக்குத் தொண்டாற்றும் கலைச்சொல்லாக்க வல்லுநர்களையும் உருவாக்கும் உயரிய இலக்கோடு, அகரமுதலி இயக்ககம் சார்பில் ஆண்டுதோறும் கலைச்சொல்லாக்கப் போட்டியும், சொல் – பொருள் புரிதலை ஆராயும் வகையில் ஓவியப்போட்டியும் நடத்தப்பெறுகின்றன.

மாநில அளவில் பங்கேற்ற இந்த இரு போட்டிகளில் பங்கேற்ற அனைவருமே வெற்றியாளர்கள்தான். அவர்களுக்கான பரிசு என்பது ஒரு சொல்லுக்கு எப்படிக் கலைச்சொல்லாக்கம் செய்வது, பழந்தமிழ்ச் சொற்களைப் புரிந்து அதற்கேற்ற படங்களை எவ்வாறு வரைவது என்று கற்றுக்கொண்ட பட்டறிவுதான் என்பது என் கருத்து. எனவே போட்டிகளில் வென்றவர்களும் நூலிழையில் பரிசுகளைப் பெறத் தவறியவர்களும் வருங்காலங்களில் சிறந்த அகராதியியல் அறிஞர்களாகவும், கலைச்சொல்லாக்க வல்லுநர்களாகவும், கலைத்திறம் மிக்க ஓவியர்களாகவும் வந்து நாட்டுக்கும் மொழிக்கும் தொண்டாற்ற வேண்டும்" என்று கூறி, போட்டிகளில் பங்கேற்ற அனைவருக்கும் சான்றிதழ்களை அகரமுதலி இயக்குநர் வழங்கினார்.

நிகழ்வில், மாணவர்கள், ஆசிரியப் பெருமக்கள், அகரமுதலி இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# செய்தி நறுக்குகள்

சென்னை
மதுரை
கோவை
திருச்சி
திருநெல்வேலி
வேலூர்
தருமபுரி
புது தில்லி
விழுப்புரம்
நாகப்பட்டினம்
http://www.dinamani.com

தினமணி

செவ்வாய்க்கிழமை
31 அக்டோபர் 2023
சென்னை
14 பக்கங்கள் ரூ.9

## அகராதியியல் நாள் விழா: மாநிலப் போட்டிகளின் முடிவுகள் அறிவிப்பு



தமிழக அரசின் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் அகராதியியல் நாள் விழாவை முன்னிட்டு சென்னையில் திங்கள்கிழமை நடைபெற்ற மாநில அளவிலான போட்டிகளில் பங்கேற்ற மாணவர்களுடன் திட்ட இயக்குநர் கோ.விசயராகவன், தொகுப்பாளர் பூங்குன்றன் உள்ளிட்டோர்.

சென்னை, அக். 30: தமிழக அரசின் அகரமுதலி இயக்ககம் சார்பில் மாநில அளவில் நடத்தப்பட்ட அகராதியியல் போட்டிகளின் முடிவுகள் அறிவிக்கப்பட்டுள்ளன.

தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் அகராதியியல் நாள் (நவ.8) விழாவை முன்னிட்டு தமிழகம் முழுவதும் பள்ளி மாணவர்களுக்கு மாவட்ட அளவிலான கலைச்சொல்லாக்கம், ஓவியப் போட்டிகள் நடத்தப்பட்டன. இதில் ஆயிரத்துக்கும் மேற்பட்டோர் பங்கேற்றனர்.

இதில் சிறப்பாக செயல்பட்ட மாணவ, மாணவிகளுக்கு மாநில அளவிலான இறுதிப் போட்டிகள் சென்னையில் உள்ள அகரமுதலி இயக்கக அலுவலகத்தில் இயக்குநர் கோ.விசயராகவன் தலைமையில் திங்கள்கிழமை நடைபெற்றது.

இதில் அனைத்து மாவட்டங்களைச் சேர்ந்த அரசு, தனியார் பள்ளி மாணவர்கள் ஆர்வத்துடன் பங்கேற்று 'சொல்-பொருள்-படம்' தலைப்பில் நடைபெற்ற ஓவியப் போட்டியில் தங்களது திறமையை வெளிப்படுத்தினர்.

தொடர்ந்து கலைச்சொல்லாக்க போட்டியில் புதிய சொற்களை உருவாக்கினர். இதையடுத்து இரு போட்டிகளிலும் மாநில அளவில் முதல் இரு இடங்களைப் பெற்ற மாணவர்களின் விவரங்களை நடுவர் குழுவினர் வெளியிட்டனர்.

அதன் விவரம்:-

**கலைச்சொல்லாக்கப் போட்டி:** முதல் பரிசு- கா.முகிலரசன், திருமுருக கிருபானந்த வாரியார் அரசு ஆண்கள் மேல்நிலைப் பள்ளி, அம்மையார் குப்பம், திருவள்ளூர் மாவட்டம்; இரண்டாம் பரிசு - மா. கலைச்செல்வி - புனித சின்னப்பர் மகளிர் மேல்நிலைப்பள்ளி, மயிலாடுதுறை.

**ஓவியப் போட்டி:** முதல்பரிசு - வெ. புஷ்பலதா, அரசு மகளிர் மேல்நிலைப் பள்ளி, போரூர், சென்னை; இரண்டாம் பரிசு - தி. சந்தோஷ் ராஜ் - தியாகராசர் நன்முறை மேல்நிலைப்பள்ளி, மதுரை.

**பரிசுத் தொகை:** இரு போட்டிகளிலும் முதல் இரு இடங்களைப் பிடித்த மாணவர்களுக்கு சென்னையில் விரைவில் நடைபெறவுள்ள விழாவில் முறையே ரூ.10 ஆயிரம், ரூ. 5 ஆயிரம் வீதம் பரிசுத் தொகை வழங்கப்படவுள்ளது.

மாநில அளவிலான போட்டியில் பங்கேற்ற மாணவர்கள், அவர்களது பெற்றோர்கள், ஆசிரியர்களுக்கு அகராதியியல் நூல்கள், சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.

இதில் அகரமுதலித் திட்ட இயக்கக தொகுப்பாளர்கள் பூங்குன்றன், ஜெ. சாந்தி, வே.பிரபு, பல்வேறு கல்லூரிகளைச் சேர்ந்த தமிழாசிரியர்கள், ஓவிய ஆசிரியர்கள் கலந்து கொண்டனர்.

இந்தியாவின் அதிக படக்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

India's No.1 English Evening Daily
EVENING TAMIL NADU

மாலை தமிழகம்

www.maalaitamizhagam.com

## இளைய தலைமுறையினர் தமிழை வாழ்வியலாக்கி முன்னேற வேண்டும்: கோ.விசயராகவன் பேச்சு



**கல்பாக்கம், அக். 19-**

தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ், ஸ்ரீபெரும்புதூர் அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறை மாணவியருக்கான அகப்பயிற்சி, கடந்த 10ம் தேதி தொடங்கி, 16ம் தேதி வரை நடைபெற்றது. பயிற்சியின் நிறைவுநாள் விழாவில், அகரமுதலி இயக்கக இயக்குனர் முனைவர் கோ. விசயராகவன், மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கி சிறப்பித்தார்.

அப்போது அவர் பேசுகையில், "அகரமுதலி இயக்கத்தில் வழங்கப்பட்ட இந்த ஐந்து நாள் பயிற்சிகளில் உங்களுக்கு, தமிழில் கணினிப் பயன்பாடு, கலைச்சொல்லாக்கம், மொழிபெயர்ப்பு, சொற்குவை வலைத்தளத்தை கையாளுதல் போன்றவை குறித்துப் பயிற்றுவிக்கப்பட்டுள்ளது. அதனை நீங்கள் தொடர்ந்து பயன்கொள்ள வேண்டும். இளையதலைமுறையினர் பேசும்போதும், எழுதும் போதும், பிறமொழி கலவாது தமிழைப் பயன்படுத்த வேண்டும். உணவு - உடை - வழிபாடு என அனைத்திலும் தமிழையும் தமிழ் மரபையும் கடைப்பிடிக்க வேண்டும். தமிழ் உணர்வை அனைத்து பயன்பாட்டிலும் செலுத்தி தாய்த் தமிழின் வளர்ச்சிக்குப் பாடுபடுவதோடு, தமிழை வாழ்வியலாக்கித் தாமும் முன்னேற வேண்டும்," என்றார். இந்த நிகழ்ச்சியில் கல்லூரியின் முதல்வர் சி.கலைமகள், தமிழ்த்துறை பேராசிரியர்கள் மு.பிச்சப்பிள்ளை, இரா.யுவராணி, கணினி அறிவியல் துறை பேராசிரியர் ச.முருகப்பன், அகப்பயிற்சி ஒருங்கிணைப்பாளர் மா.பூங்குன்றன் மற்றும் அகர முதலித் திட்ட இயக்ககப் பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள், கண்காணிப்பாளர் மற்றும் அலுவலர்கள், பணியாளர்கள் உட்பட பலர் கலந்து கொண்டனர்.

இன்றைய செய்தி நாளைய வரலாறு

கலைஞர் 100 1924-2023

முரசொலி

Murasoli

www.murasoli.in

நிறுவனர்: கலைஞர் மு. கருணாநிதி



சென்னை கலைவாணர் அரங்கத்தில், நேற்று (8.11.2023) "தமிழ் அகராதியியலின் தந்தை என்று போற்றப்படும் வீரமாமுனிவரின் பிறந்த நாளை முன்னிட்டு "தமிழ் அகராதியியல் நாள் விழாவில் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அமைச்சர் மு.பெ.சாமிநாதன் "தமிழ்ப்பேசி எனும் குறுஞ்செயலியை வெளியிட்டார். உடன், தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அரசு செயலாளர் மரு. இரா. செல்வராஜ், தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் ந. அருள், செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் மற்றும் அரசு உயர் அலுவலர்கள் உள்ளனர்.

### வீரமாமுனிவர் பிறந்தநாளை முன்னிட்டு

## தமிழ் அகராதியியல் நாள் விழா - 2023!

### அமைச்சர் மு.பெ.சாமிநாதன் விருதுகளை வழங்கினார்!

சென்னை, நவ.9-

'தமிழ் அகராதியியலின் தந்தை' என்று போற்றப்படும் வீரமாமுனிவரின் தமிழ்த்தொண்டைப் போற்றும் வகையில், அவரது பிறந்த நாளான நவம்பர் 8-ஆம் நாளைத் 'தமிழ் அகராதியியல் நாள் விழா'வாகக் கொண்டாட தமிழ்நாடு அரசு பிறப்பித்துள்ள அரசாணையின்படி, 'தமிழ் அகராதியியல் நாள் விழா' கொண்டாடப்பட்டு வருகிறது.

அந்த வகையில், 2023-ஆம் ஆண்டுக்கான 'தமிழ் அகராதியியல் நாள் விழா' சென்னை, கலைவாணர் அரங்கத்தில் நேற்று (08.11.2023) சிறப்புற நடைபெற்றது. இவ்விழாவில், தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அமைச்சர் மு.பெ.சாமிநாதன் பங்கேற்று, செல்வன் த.தினேசு (அரியலூர்), வா.பரணிப்பாவலன் (செங்கல்பட்டு), கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு (சென்னை), ச.கருத்தான் (எ) காளிதாசன் (கடலூர்), புலவர் கோ.வெங்கடாசலம் (எ) பாவலர்கோ. மலர்வண்ணன் (தருமபுரி), செல்வன் மோ.நாக அர்ச்சுன் (திண்டுக்கல்), செல்வி பெ.தனலட்சுமி (ஈரோடு), செல்வன் ச. வாசுதேவன் (எ) நடுநாட்டுத்தமிழன் (கள்ளக்குறிச்சி), செல்வி விண்மீன்(எ) சி.ஏமலதா (காஞ்சிபுரம்), அகநம்பி (தமிழ் மைம்பி) தி.பாலசுப்பிரமணியன் (கன்னியாகுமரி), முனைவர் வே.குழந்தைசாமி (கோயம்புத்தூர்), செல்வன்

மு.சந்தோசகுமார் (கிருட்டினகிரி), சித்தார்த்பாண்டியன் (எ) பெ.தங்கப்பாண்டி (மதுரை), செல்வி இர. அகிலா (நாகப்பட்டினம்), முனைவர் அ.செந்தில்குமார் (எ) தமிழ்க்குமரன் (பெரம்பலூர்), செல்வி மெ.சிவநந்தினி (புதுக்கோட்டை), சு.சோலைராசா (இராமநாதபுரம்), முனைவர் அ.மீனா (இராணிப்பேட்டை), முனைவர் தமிழ்ப்பரிதிமாரி (சேலம்), திருமதி கோ. ஆனந்தா (சிவகங்கை), பா.கோவிந்தராசன் (தஞ்சாவூர்), மு.சுப்பிரமணி (தேனி), செல்வி இ.செல்வகவிதா (தென்காசி), முனைவர் ச.சரவணன் (திருப்பத்தூர்), செல்வி பு.கீர்த்தனா (திருப்பூர்), முனைவர் சி. இராமச்சந்திரன் (திருவள்ளூர்), செல்வி ச.கீர்த்தனா (திருவண்ணாமலை), தி.தினேசுபாபு (திருவாரூர்), வ.செல்வமாரிமுத்து (திருநெல்வேலி), நாவை. சிவம் (எ) து.வை. சிவராமலிங்கம் (திருச்சிராப்பள்ளி), முனைவர் செ.அந்தோணி ராகுல் கோல்டன் (தூத்துக்குடி), செல்வன் இர.கண்ணன் (நாமக்கல்), செல்வன் ம.ச.சந்திப் (வேலூர்), பெ.கலியன் (விழுப்புரம்), திருமதி பி.நிலா (விருதுநகர்) ஆகியோருக்கு 2022-ஆம் ஆண்டுக்கான 'தூயதமிழ்ப் பற்றாளர் விருதும்', தென்மொழி - திங்களிதழ் சார்பாக முனைவர் மா.பூங்குன்றன் அவர்களுக்கு 2022-ஆம் ஆண்டுக்கான 'தூயதமிழ் ஊடக விருதும்' மரபுக்கவிதை பிரிவில் ப.எழில்வாணன் மற்றும் புதுக்கவிதை பிரிவில் ம.சுடர்த்தமிழ்ச் சோழன் ஆகியோருக்கு 2022-ஆம் ஆண்டுக்கான 'நற்றமிழ்ப் பாவலர் விருதும்' என மொத்தம் 38 தமிழ்ப் பற்றாளர்களுக்கு விருதுகளை வழங்கி வாழ்த்து தெரிவித்தார்.

மேலும், 2023 ஆம் ஆண்டுக்கான 'அகராதி ஆய்வு மலர்', 'வட்டார வழக்குச் சொற்பொருள் அகராதி', 'மருத்துவக் கலைச்சொல் அகராதி', 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் திருத்திய பதிப்பு

(7 தொகுதிகள்), பன்மொழி அகராதியுடன் கூடிய குறுஞ்செயலி ஆகியவற்றை வெளியிட்டார்.

இவ்விழாவில் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அரசு செயலாளர் மரு.இரா.செல்வராஜ், தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர்

முனைவர் ந.அருள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் மற்றும் அரசு உயர் அலுவலர்கள் பங்கேற்றனர்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"நன்று தமிழ் வளர்க! தமிழ்
நாட்டினில் எங்கணும் பல்குக! பல்குக!
என்றும் தமிழ் வளர்க - கலை
யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக"

– பாவேந்தர் பாரதிதாசன்

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 107–109 வரையிலான அமர்வுகள் 2023 அகுதோபர் 13, 25, நவம்பர் 10 ஆகிய நாள்களில் நடைபெற்றன.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 16.10.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**முனைவர் மெய். சித்ரா**
தலைவர், தமிழ்ப் பண்பாட்டு இயக்கம், ஆங்காங்





**திரு. வி. இ. குகநாதன்**
எழுத்தாளர், ஒன்றிணைந்த அரசகம்

**திரு. இரா. திருமாவளவன்**
தலைவர், மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா





**பொறிஞர் உலோ. செந்தமிழ்க்கோதை**
அறிவியல் எழுத்தாளர், சென்னை

## 20.10.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பேரா. முனைவர் க. கலைமதி**
நுண்ணுயிரியல் (ம) தொற்றுநோய்த்துறை
ஃப்ளோரிடா பன்னாட்டுப் பல்கலைக்கழகம்,
மயாமி, அமெரிக்கா





**பேரா. முனைவர் மு. முத்துவேலு**
மாநிலச் சட்ட ஆட்சிமொழி ஆணைய மேனாள் உறுப்பினர்
சென்னை

**பொறிஞர் முனைவர் ந. அரவிந்த்**
உதவிப் பேராசிரியர், அமைப்பியல் துறை,
தேசிய அறிவியல் (ம) தொழில்நுட்பப் பல்கலைக்கழகம், ஓமன்





**பேரா. முனைவர் சு. சந்திரசேகரன்**
புலநெறிப் பேராசிரியர், தகவல் தொழில்நுட்பத்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர்

## 10.11.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**
கனடா





**பேரா. முனைவர் மாதரி மாணிக்கம்**
முன்னை புல முதன்மையர்,
வணிகவியல்துறை
கோயம்புத்தூர்

**கவிப்பாவை சாவித்திரி கிருஷ்ணமூர்த்தி**
பொதுச்செயலாளர், கம்பன் கழகம்,
பிரான்சு



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

**முனைவர் மெய். சித்ரா**

| | | |
|---|---|---|
| Circumfix | _ | இருபக்க ஒட்டு |
| Stop words | _ | இறு சொற்கள் |
| Feedforward | _ | முன்னிலையறிதல் |

**திரு. இரா. திருமாவளவன்**

| | | |
|---|---|---|
| Funicular | _ | மலையூர்தி |
| Quintuplets | _ | ஐம்மியர் |
| Discharge | _ | பெயர்வெட்டல் / நீக்கல் |

**திரு. வி. இ. குகநாதன்**

| | | |
|---|---|---|
| Sixpack body | _ | அறுதிரள் யாக்கை |
| Blindfold chess | _ | பாரா வல்லு |
| En passant | _ | கடந்து போதல் |

**பொறிஞர் உலோ. செந்தமிழ்க்கோதை**

| | | |
|---|---|---|
| Galactocentric orbit | _ | பால்வெளி மைய வட்டணை |
| Hermeocentric orbit | _ | அறிவன் மைய வட்டணை |
| Cronocentric orbit | _ | காரிக்கோள்மைய வட்டணை |

**பேரா. முனைவர் க. கலைமதி**

| | | |
|---|---|---|
| Preventative antibiotics | _ | தடுப்புக் கொல்லிகள் |
| Antivirals | _ | எதிர்நுண்மங்கள் |
| Pan drug resistance | _ | கொடூர மருந்து எதிர்ப்பாற்றல் |

**பொறிஞர் முனைவர் ந. அரவிந்த்**

| | | |
|---|---|---|
| Split spoon sampler | _ | பிளவு உருளை |
| Distortion | _ | தன்நிலை மாறுதல் |
| Jack plane | _ | இளைப்புளி |

**பேரா. முனைவர் மு. முத்துவேலு**

| | | |
|---|---|---|
| Competency | _ | தகுதிறன் |
| Deed | _ | ஒப்பாவணம் |
| Instrument | _ | முறையாவணம் |

**பேரா. முனைவர் சு. சந்திரசேகரன்**

| | | |
|---|---|---|
| metaverse | | தன்விசும்பு |
| Quantum Sensor | _ | குவைய உணர்வி |
| Decentralized Applications / Dapps | _ | ஒப்புகை வலைச்செயலி |

**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**

| | |
|---|---|
| Tee | பந்தேந்தி |
| Water hazard | நீரிடரிடம் |
| Break | சரிவளவு |

**கவிப்பாவை சாவித்திரி கிருஷ்ணமூர்த்தி**

| | |
|---|---|
| Agroservice | கழனிப்பணி / பழனப்பணி |
| Area | விரிவகம் |
| Consumer | கொள்வோர் |

**பேரா. முனைவர் மாதரி மாணிக்கம்**

| | |
|---|---|
| Duty draw back | மீட்கப்பட்ட வரி |
| Stevedore | சுமையாள் |
| Scrap | பயனற்றவை |

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து

குறள்.645